REGD. No. M. 1190.







# ஆனந்த போதினி

# ANANDA BODHINI

Vol. 29. பொருளடக்கம். No. 6.

சுபானு௵ மார்கழி௴ கஉ





உள்ளடக்கம். பக்கம்.









ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.


தொகுதி 29 | சுபானு ஸ்ரீ மார்கழி மீ ௧உ | பகுதி 6
1943ஸ்ரீ டிசம்பர் மீ 16உ


## கடவுள் வணக்கம்.

உம்பர்கட்(கு) அரசே! ஒழிவுஅற நிறைந்த
யோகமே! ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்துஎன் குடிமுழுது ஆண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே!
செம்பொருள் துணிவே! சீர்உடைக் கழலே!
செல்வமே! சிவபெரு மானே!
எம்பொருட்(டு) உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்குஎழுந்து அருளுவது இனியே! (1)

அம்மையே! அப்பா! ஒப்பிலா மணியே!
அன்பினில் விளைந்தஆ ரமுதே!
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் தனக்குச்
செம்மையே யாய சிவபதம் அளித்த
செல்வமே! சிவபெரு மானே!
இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்குஎழுந்து அருளுவது இனியே! (2)

அருள்உடைச் சுடரே! அளிந்ததோர் கனியே!
பெருந்திறல் அருந்தவர்க்கு அரசே!
பொருளுடைக் கலையே! புகழ்ச்சியைக் கடந்த
போகமே! யோகத்தின் பொலிவே!
தெருள்இடத்து அடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே!
இருள்இடத்து உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்குஎழுந்து அருளுவது இனியே! (3)

ஆனந்தபோதினி

# சுதந்திரம் எப்போது கிட்டும்?

ஒவ்வொரு நாட்டிலும் அந்நாட்டு வளப்பம், மக்கள் நலம், மொழி யாக்கம், சமய வளர்ச்சி ஆகியவற்றுக்கான முயற்சிகள் தீவிரமாக நடைபெறுகின்றன. மேற்குறித்தவைகளுக்காகப் பாடுபட தேசிய ஸ்தாபனங்கள், கல்வி ஸ்தாபனங்கள், சமயப் பிரசார ஸ்தாபனங்கள், சமூக முன்னேற்ற ஸ்தாபனங்கள் பல இருக்கின்றன. மேனாடுகளில் மட்டுமல்ல; இந்தியாவில் வடபாகங்களில்கூட அவ்வச் சமூக நலத்துக்கான ஸ்தாபனங்கள், தாய்மொழி இலக்கிய வளர்ச்சிக்கான சங்கங்கள், சர்வகலாசாலைகள், மத ஸ்தாபனங்கள் இருந்து வேலை செய்து வருகின்றன. அவ்வளவு ஏன்? நம் சென்னை மாகாணத்திலேயே உள்ள ஆந்திரம், கேரளம், கன்னட நாடுகளில் கூட அவ்வச் சமுதாய முன்னேற்றத்துக்கென சமூக ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவ்வம்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கென சங்கங்கள், சர்வ கலாசாலைகள் இருக்கின்றன. மதாபிவிருத்தி சங்கங்கள் வேலை செய்கின்றன. தமிழ் நாட்டிலோ, மற்ற நாடுகளில் உள்ளது போல், சமுதாய முன்னேற்றம், தாய்மொழி யாக்கம், சமய வளர்ச்சி ஆகியவைகளுக்காகப் பாடுபடும் சங்கங்கள், ஸ்தாபனங்கள் சரியானபடி இல்லை. பெயரளவுக்கு இருக்கும் சில சங்கங்களும் பிரயோஜன மில்லாமல் இருந்து வருகின்றன. தாய்மொழியான தமிழ் மொழி, இலக்கியங்களின் வளர்ச்சிக்கெனத் தனியாக இன்னும் ஒரு கல்லூரி, சர்வ கலாசாலை ஏற்படவில்லையென்றால், அதிகஞ் சொல்லுவானேன்! ஆந்திரர்களுக்கு எனத் தனியாக விசாகப் பட்டினத்தில், ஆந்திர சர்வ கலாசாலை இருக்கிறது. மலையாளிகளுக்குத் தெற்கில் திருவாங்கூர் சர்வ கலாசாலை, கொச்சியில் ஒரு சர்வ கலாசாலை, தென் கன்னடத்தார்க்கு மைசூர் சர்வ கலாசாலை என்றெல்லாம் இருக்கிறது. ஆனால், தமிழர்களுக்கோ தனியாக ஒரு சர்வ கலாசாலை கிடையாது. அரசாங்கத்தாரால் நடத்தப்

பட்டு வரும் சென்னை சர்வ கலாசாலையைத் தமிழ்க் கலா சாலை என்று சொல்ல முடியுமா? முடியாது. தமிழ்மொழி யாக்கத்துக்கும், இலக்கிய வளர்ச்சிக்கும் அங்கு இடமே கிடையாது. இந்நிலையில் சுமார் பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன் தமிழ்ப் பெருமகனுன ராஜா—ஸர். அண்ணுமலை செட்டி யாரால் தனிப்பட்ட ஹோதாவில் ஒரு சர்வ கலாசாலை, சிதம்பரத்தில் ஏற்படுத்தப் பட்டது. இது தமிழ்மொழி யாக் கம், இலக்கிய வளர்ச்சிக்கான தமிழ் சர்வ கலாசாலையாக அமையும் என மொழி நலம் விரும்பும் அறிஞர் பலர் எதிர் பார்த்தனர். இது இயற்கைதானே! ஆனால், இச் சர்வ கலா சாலையின் நடை முறைப் போக்கைப் பார்த்தால், ஏமாற்றத் தையே தந்தது. தமிழ்ச் செல்வரால் நிறுவப்பட்டு, தமிழ் மக்களின் பேராதரவால் பலப்பட்டு வரும் அண்ணுமலை சர்வ கலாசாலை முடத்தெங்கைப் போல், பிற மொழி யாக்கம், இலக்கிய வளர்ச்சிக்காகப் பயன்பட்டு வருகிறதே யொழிய, தமிழ் மொழி, இலக்கியம், இசை ஆகியவைகளின் வளர்ச்சிக் காகப் போதியபடி பயன்பட வில்லை. இது தமிழ் நாட்டின் துரதிர்ஷ்டம் என்று சொல்வதைத் தவிர, வேறு என்ன சொல்ல முடியும்? இத் துரதிர்ஷ்ட நிலைமையைத் தான் ஸர். ஆர். கே. சண்முகம் செட்டியார், சமீபத்தில் நடந்த அண்ணுமலை சர்வ கலாசாலையின் பதின்மூன்ருவது பட்ட மளிப்பு விழாவில் தாம் செய்த பட்டமளிப்பு விழாப் பிரசங் கத்தில் குறிப்பிட்டார். அதாவது, "இக் கலாசாலை ஏற்படுத் தப்பட்டபோது பண்டைக்காலத் தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சிக்கு இது சாதகமாக இருக்கும்; தமிழ்க்கலை நாகரிகம் முதலியவற்றுக்காக இங்கு ஆராய்ச்சிகள் நடைபெறும் என்று ஒரு நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால், இந் நம்பிக்கை எதிர் பார்த்தவளவு நிறைவேறவில்லை. இந்தக் கலாசாலை, தமிழ் மொழி யாக்கம், இலக்கியம், இசை வளர்ச்சிக்கான நிலைய மாகவே விளங்கவேண்டும்" என்று கூறியிருக்கிருர்.

மேலும், ஸர். சண்முகம், தமிழ் இலக்கியங்களின் உயர் வைத் தாம் கண்டறிந்த வகையைக் கூறுவது நம்மை வியப் பில் ஆழ்த்துகிறது. அவ்வறிஞர் சொல்லுகிருர்: "சில வாண்டு களுக்கு முன்புதான், தமிழ் இலக்கியங்களை நான் கொஞ்சம் தீவிரமாகப் படிக்கத் தொடங்கினேன். உலகிலுள்ள சிறந்த கலை இலக்கியங்களுடன் தமிழ் இலக்கியம் சமமாக விளங்குவது எனக்குத் தெரிந்தது. இன்னம், முன்னதாகவே ஏன் இந்த வேலையில் நான் ஈடுபடவில்லை என்று வருந்தினேன்" என அவர் கூறுவதை, பிற மொழிகளில் மோகங்கொண்டு தாய்மொழியாகிய தமி ழைப் பழிப்பவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டுகிறேம்.

ஸர். சண்முகம் மேலும் பேசுகையில், "சிறிது காலமாக, நாடெங்கும் தாய் மொழியைப் படிக்க வேண்டுமென்றும், பல் வேறு கலை. ஞானங்களை உயிர்ப்பிக்க வேண்டுமென்றும் முயற்சி தீவிரமாக நடந்து வருகிறது. இவைகளினால், இந்தியாவின் ஒற்றுமை குலைந்து விடும் என்று நான் நினைக்கவில்லை, உண்மையில் இம் முயற்சிகளை எதிர்ப்பவர்கள் இந்திய தேசீயத்துக்கு விரோதிகளென்றே நான் கருதுகிறேன். தனியாக இருக்கும் பல்வேறு ஞானமார்க்கங்கள், கலைகள் தான் இந்திய தேசியத்துக்கும் இந்தியக் கலைக்கும் அடிப்படை என்பதை மறக்கலாகாது" என்று நன்றாக எடுத்துக் கூறியிருக்கிறார்.

ஸர். சண்முகம், கடைசியாகக் குறிப்பிட்ட ஒரு விஷயம் கூர்ந்து கவனிக்கத்தக்கது. "குறிப்பிட்ட ஞானமார்க்கங்கள், கலைகள் இவற்றைப் பின்பற்றும் ஒரு வகுப்பினர் தங்களுடைய கொள்கைகளை வற்புறுத்தி, பிறர் அவற்றை ஏற்றுக் கொள்ளும்படி செய்வதாலேயே அபிப்பிராய பேதத்துக்கும், மனக் கசப்புக்கும் இடம் ஏற்படுகிறது. தேசீயத்தின் பெயரால் அவர்கள் பிறரை அடக்கித் தங்களுடைய அதிகாரத்தையும், சலுகையையும் நிரந்தரமாக இருக்கச் செய்கின்றனர். உலகிலுள்ள ஒவ்வொரு தேசத்திலும் ஒரு வகுப்பினர் அரசாண்டு வந்தனர். ஜனநாயகம் வந்தவுடன் அரசாட்சிகள் நாசமடைந்தன. இந்தியாவில் வர்ணாசிரம முறைதான் அதிகாரத்தையும் ஏகபோக உரிமையையும் நீடிக்கும்படி செய்து வந்தது. இந்நாட்டில், அதிகாரத்திலும், ஏகபோக உரிமையிலும் முழுகிக் கிடக்கும் வகுப்பினர் அவற்றை எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரமாக விட்டுக் கொடுக்க முன்வருகிறார்களோ அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரமாக இந்தியாவுக்குச் சுதந்திரமும் ஜனநாயகமும் வந்துவிடும். நம்மை ஆளும் அயல் நாட்டு வர்த்தகரின் வாக்குறுதி, நல்லெண்ணம் இவைகளினால் மட்டும் நம் நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்துவிடாது" என்று எந்நாட்டிலும் இல்லாதவாறு நம் நாட்டில் மட்டும் விசித்திரமாக இருந்து, பிறப்பினாலேயே மக்களைப் பிரித்து அலக்கழித்து வரும் வர்ணாசிரம தர்ம முறையிலுள்ள கேடுகளையும், அதனால், நாட்டுக்கும் கலை நாகரிகங்களுக்கும் ஏற்பட்டுவரும் தீமைகளையும் எடுத்துக் காட்டியிருப்பதை எவரும் மறுக்க முடியாது. வர்ணாசிரம தர்ம முறையை அநுஷ்டித்து வரும் ஒரு பிரிவினர் மற்ற மக்கள் மீது பலவகையிலும் செலுத்திவரும் ஆதிக்கத்தை விட்டொழித்தாலன்றி, ஸர். சண்முகம் கூறுவதுபோல், நம் மக்களுக்கு உண்மையான சுதந்திரம் கிடைப்பதென்பதும், மொழி இலக்கியங்கள் வளர்ச்சியுறு மென்பதும் முயற்கொம்பேயாகும்.

# மனம் கவர்ந்த பெரியாழ்வார்

("ஹரன்")

★

## 3. பெரியாழ்வார் என்ற பாரதியார்!

"அடி, யசோதை! உன் கிருஷ்ணன் செயலை என்ன வென்று சொல்வோமடி!............" என்கிறார்கள் திடீரென்று, இடைச்சியர்.

யசோதையின் முகத்தில் புன்னகையின் ரேகை நெளிகிறது. சிரித்து விடலாம் அவள்! ஆனால், 'என்ன தோரணையில் அல்லது உணர்ச்சியில் கண்ணனைக் குற்றஞ் சாட்டுகிறார்களோ, இந்த இடைச்சியர்' என்பதுதான் அவள் எண்ணம். கண்ணனின் ஒவ்வொரு குறும்புத் தனத்திலும் ஒளிரும் அழகு பாவம்—எல்லோரையும் கவர்ச்சிக்கும் ஓர் தன்மை—அந்த இடைச்சியரையும் கவர்ச்சித் திருக்கலாம். பின் ஏன் அவர்கள் யசோதையிடம் இப்படிப் புகார் செய்ய வேண்டும்? இன்னும் கேளுங்கள்:

"ஆற்றில் நீர் விளையாடிக் கொண்டிருந்தோம்........." என்று இழுக்கிறாள் ஒருத்தி. ஆனால் 'சட்'டென்று நிறுத்தி விடுகிறாள்! அவள் அடுத்தவளைப் பார்த்த பார்வையானது, "ஏண்டி! நீதான் சொல்லேண்டீ!" என்ற பாவத்தை வெளிப் படுத்துகிறது. அந்த அடுத்த நங்கை வாய் திறக்கிறாள்:

"ஆமாம், அம்மா! குளித்துக் கொண்டிருந்தோம். உங்கள் மணிவண்ணன்.............." என்று அவளும் இழுத்து விட்டு, "காதுகளில் உள்ள குண்டலங்கள் தாழவும் குழல் தாழவும் அழகிய ஆபரணங்கள் கோக்கப்பட்ட நாண் தாழவும் எட்டு திக்கில் உள்ளவர்கள் இறைஞ்சிப் புகழும்.............." என்று இன்னும் அவள் இழுக்கிறாள்! அது வரை மெல்லிய குரலில் 'ஊம்' என்று கேட்டுக் கொண்டு வந்த யசோதை, ஒரு பெரிய, சப்தமான குரலில் 'ஊம்' என்று கத்துகிறாள் போலும்! ஏனென்றால் அவள் போட்ட சத்தத்தில் அதே நங்கை தன் வாக்கியத்தைப் பூர்த்தி செய்து விடுகிறாள், பெண்மையின் நாணத்தை அகற்றி விட்டு!

"........அந்த நிலையோடு கண்ணன் எங்கள் துகிலை நாங்கள் அறியா வண்ணம் எடுத்துக் கொண்டு ஒரு மரத்தில் ஏறி விட்டான்!........" என்று அந்த நங்கை சொல்லும் போதே அவள் முகமெல்லாம் 'குப்'பென்று வியர்த்து, அங்கே சிவப் பேறிவிடும் என்றுதான் நாம் கற்பனை செய்வோம். முற்றிலும் சரியான, பொருத்தமான கற்பனை இது!

ஏனெனில், யசோதை 'குபீரெ'ன்று சிரித்து விடுவாள். அதுவுமல்லாமல் அந்த நங்கை மேலே சொல்வதற்குத் திக்கு முக்

காடும் பொழுது மற்றொருத்தி, "நாங்கள் என்ன கேட்டும் 'தர மாட்டேன்' என்று கண்ணன் கூறி விட்டான்!" என்று சொல்லி விஷயத்தையும் முந்தின நங்கையின் நாணத்தையும் ஒருவாறு சமாளித்து, விஷயத்திற்கும் ஒரு முடிவைக் கொடுத்து விட்டாள்!

பலவித ஆராய்ச்சிகளுக்கும் உணர்ச்சிப் பெருக்கிற்கும் உரிய இடம் இது. அஃதாவது பெரியாழ்வாரின் இந்தக் கவி:

"குண்டலம்தாழக் குழல்தாழ நாண்தாழ
எண்டிசையோடு மிறைஞ்சித் தொழுதேத்த
வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு
விண்டோய் மரத்தானை யின்று முற்றும்
வேண்டவும் தாரானை யின்று முற்றும்!"

கண்ணன் 'இது செய்தான்' என்று 'டக்'கென்று சொல்வதற்கு நாணம். ஆகவே, காலத்தை நீடிக்கக் கண்ணனின் அப்போழுதைய நிலையை வருணனை செய்கிறார்கள்! அல்லது கண்ணனிடம் உண்டாகிய அபாரப் பிரேமையினால் தானோ என்னமோ அவர்கள் கண்ணனின் அந்த நிலையை வருணித்தது!

அந்தக் கண்ணன் 'தீராத விளையாட்டுப் பிள்ளை' என்று பாரதியார் கூறுகின்றார். கிருஷ்ணனுக்கு எப்போதுமே விளையாட்டுத்தான்! அது நமக்கு எல்லோருக்குமே தெரியும்! ஆனால் பாரதியார்,

"கண்ணன் பிறந்தான்—எங்கள்
கண்ணன் பிறந்தான்!—இந்தக்
காற்றதை எட்டுதிசையிலும் கூறிடும்
திண்ணம் உடையான்—மணி
வண்ணம் உடையான்..........."

—என்று பாடுகிறார்.

பெரியாழ்வாரோ,

"சிறுவிரல்கள் தடவிப் பறிமாறச்
செங்கண் கோடச்செய்யவாய் கொப்பளிப்பக்
குறுவெயர்ப் புருவம் கூடலிப்ப
கோவிந்தன் குழல் கொடூதினபோது
பறவையின் கணங்கள் கூடுதுறந்து
வந்துசூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்து இறங்கிச் செவியாட்ட கில்லாவே!"

—என்று பாடியிருக்கிறார்.

கிருஷ்ணன் குழல் ஊதுகிறான். வேணுவினின்றும் வரும் இன்னிசை வெளியுலகத்தை எவ்வாறு இன்பகரத்தில் ஆழ்த்து கிறது என்பதை அநுபவித்துக் கூறுகிறார் பெரியாழ்வார்.

அந்தச் சின்னஞ் சிறு விரல்கள்—மணி விரல்கள்—அந்தக் குழலின் மேல் அப்படியும் இப்படியுமாகத் தாண்டவ மாடுகின் றன. கமலங்களை ஒத்த கண்களை ஒரு விதமாகச் சாய்த்துப் பார்க்கும் நேர்மை, அழகுதான் என்னே! குழல் ஊதும் போது வாய் கொப்பளிக்கிறது; சிறு வியர்வைத் துளிகள் தோன்றிய புருவங்களோ அடிக்கடி சுருங்கி ஒன்றை யொன்று சேருகின்றன! அஃதில் எவ்வளவு அழகைக் கவிதையின் மூலம் மானஸீகத்தில் மனனம் செய்து விடுகிறோம், என்றும் மாறாதபடி!

அந்தச் சமயத்தில் ஆசினியில் உலவும் பக்ஷி ஜாலங்கள் யாவும் கூட்டைத் துறந்தன. அல்லது கூட்டிலுள்ள இதர சிறு பக்ஷிகளுக்கான இரையைத் தேடுவதை மறந்தன. நேரே கண் ணன் திருவடியின் கீழ், இல்லை யில்லை;-அக்குழலின் இன்ப நாதத் திற்குக் கீழ்ப்பட்டு—மெய்மறந்தன. பசுக்களும் அவ்வாறே. அவை கால்களைப் பரப்பிக் கொண்டன. பாவம்! அந்த இன்ப நாதத்தில் அவை சுழன்ற சுழற்சியில் மயக்க மடைந்து போய் காதுகளைக் கூடத் தமது இயல்பான குணத்தின் பிரகாரம் ஆட்ட வில்லை!

கண்ணன் அவ்வளவு அற்புதமாகக் குழல் ஊதுகிறான். வேய்ங்குழலினின்றும் வெளிவரும் **சிறு காற்றால்** இவ்வையகம் மகிழ் கின்றது. அச் சிறு காற்று, மெல்லிய இசை பறவைகளுக்கு **உணவைத் தந்தது;** பசுக்களுக்குப் **புல்லைத் தந்து காதுகளில் 'ஜம்' என்று உட்கார வரும் ஈக்களை விரட்டியது.**

இவ்வளவையும் பெரியாழ்வார் உரைத்தார். அப்போது அவர் மனம் மகிழ்ந்திருக்க வேண்டும். பாரதியாரிடம் கொஞ்சம் வாருங்கள்:

**"கண்ணன் பிறந்தான்!"** என்கிறார். முதல் அடி. வீர உணர்ச்சி பொங்குகிறதா? சாந்த உணர்ச்சி பொங்குகிறதா? பெருமை பொங்குகிறதா? நிர்ணயிக்க முடியாது.

**"இந்தக் காற்றதை எட்டு திசையிலும் கூறிடும் திண்ணம் உடையான்!"** என்னும் போதுதான் மயிர் சிலிர்க்கிறது.

ஆஹா! பெரியாழ்வாரின் கிருஷ்ணன் தன் வன்மையின் மூலம் வேணுவின் சிறுகாற்றில் இவ்வுலகத்தை இன்பத்தில் ஆழ்த்தினான். இதோ, பாரதியாரின் 'கண்ணன் வலிமை' இந்த உலகத்தின் எட்டு திசையிலும் உள்ள காற்றை [பாரதியார் புது மைக்கவி யாதலால் இந்தக் காற்றை இப்போது எட்டு திசையி லும் வியாபித்திருக்கும் ஜாதி, மத வேறுபாடுகள், பொய், சூது,

கொலை, களவு முதலிய கொடுங் காற்றுக்கு எடுத்துக்கொண்டால் மிகவும் பொருத்தமாகவே இருக்கும்] கூறிடுவதாயுள்ளது!

ஆகவே, எனது உள்ளொளி இந்த ஆராய்ச்சியில் [இதை 'ஆராய்ச்சி' என்று சொல்வதற்கே அல்லது எழுதுவதற்கே என் உள்ளமும் கையும் ஒருங்கே நடுங்குகின்றன; காரணம் "ஒரு கவிஞனின் 'மன ஆழத்'தை அறியக்கூடுமா" என்ற பிரமைதான்] ஒரு தீர்மானமான முடிவுக்கு வருகிறது.

முற்காலப் போக்கானது மிருந்த நாக்ரிக முடையதாயும் ஈசுவரபக்தி நிறைந்ததாயு மிருந்திருக்கலாம். ஆனால் இக்காலப் போக்கினை யாவரும் அறிவார்கள்! சமூகப் பிரச்னைகளைப்பற்றி யும் சமூக சீர்திருத்தவாதிகளின் மேன்மையைப்பற்றியும் முற்காலத்தில்—அஃதாவது பெரியாழ்வார் காலத்தில் சர்ச்சைகள் நிகழ ஏதுவில்லை. ஆனால் தற்போது மிகுதியாக நிகழுகின்றன!

பாரதியார் சமூகப் பிரச்னைகளின் நல்ல முடிவுகளைக் கிளப்பி விடக்கூடிய ஒரு கவிஞர். ஆனால் அவரே பெரியாழ்வார்—அவருடைய புனர் ஜன்மம்—என்று உள்ளொளிக்கு இணங்க நான் துணிந்து கூறிவிட முடியும்.

"இப்படிக் கிருஷ்ணனை வைக்கக்கூடாது. கிருஷ்ணனுடைய வன்மையை இப்படிப் புகுத்தினால் [நூலின் மூலமாகத்தான்!] இந்த உலகத்திற்கு எங்கே தெரியப்போகிறது? இதோ புதிய கிருஷ்ணனை சிருஷ்டி செய்கிறேன். இந்தக் கிருஷ்ணனின் வன்மையைப் பாருங்கள்!" என்று பெரியாழ்வார் என்ற பாரதியாருடைய கவிதையின் பாவம் கூறுவது போன்று நமக்கு—நமது மனச்சாட்சிக்கு இணங்க தோன்ற வில்லையா?

"விளையாட்டுக்கு விளையாட்டு; வருணனைக்கு வருணனை; எல்லாவற்றிலும் உணர்ச்சிக்கு உணர்ச்சி!" அப்பப்பா! கவிஞர்களின் உள்ளங்கள் தான் எவ்வளவு ஆழம் வாய்ந்தன! ஏன் அந்தப் பிரமன் நம்முடன் கூடவே அதற்கான அளவு கோல்களையும் சிருஷ்டி செய்ய வில்லை? அல்லது கவித்துவத்தை—உண்மையான கவிஞனது உள்ளத்தை—நமக்குக் கொடுக்கவில்லை?

'மனம் கவர்ந்த பெரியாழ்வாரின்' கவிதா இலட்சியம் எப்படிப்பட்ட பண்பினை அகத்தே பொருந்தப் பெற்றது பாருங்கள்!

# பருத்தியின் கூற்று

(ருக்மணி-சாம்பசிவம்)

★

செஞ்செடியில் யாமுதித்தோம்; காயுமானோம்;
'சிடுக்'கெனவே வெடித்தோம்; வெண் பருத்தியானோம்;
பஞ்சையர்கள் பார்த்தார்கள்; சிரித்தோம்; வந்து
பறித்தார்கள்; துணுக்குற்றோம்; பைக்குள்போனோம்;
எஞ்சொல்லால் முடியாபல் வண்டியேறி,
எங்கெங்கோ போனோம்; பின் இறங்கினோம்; ஆ!
பஞ்சுபடாப் பாடெல்லாம் பட்டோம்; மேலும்,
படாதவகை யுண்டோ? இப் பாரின் மீதே. (1)

யந்திரத்தில் போய் நுழைந்தோம்; உயிராம் வித்தை
எடுத்துபிரித் தனுப்பியதும் போனோம்: அங்குப்
பந்துபந்தாய் நூலானோம்; நுழைந்தோம் பின்பும்;
பலவிதஞ்சேர் ஆடைகளாய்ப் பரிண மித்தோம்;
கொந்துறுபூங் குழலாரின் மேலும்யாமே
குடிகொண்டோம், பலநிறத்தால்; கூறுங்காலே
அந்தமிலாப் பல்பொருளா யானோம்; இங்கே
அறியாதார் யார்எம்மை அவனிமீதே? (2)

'கோட்'டானோம்; 'ஷர்ட்'டானோம்; 'டர்பன்' ஆனோம்;
குறுங்கழுத்து 'டை'யானோம்; 'சூட்'டுமானோம்;
காட்டானும் கைக்கொள்ளும் 'கர்ச்சீப்'பானோம்;
காளையர்கள் தூக்கிவிடும் 'காலர்' ஆனோம்;
'சீட்டாடுந் துணி'யானோம்; 'சிலிப்பர்' ஆனோம்;
சிங்காரப் 'பூ'வானோம்; சேவகர்க்கே
நீட்டான 'மாராக்கு' மானோம்; எங்கள்
நிலையின்னும் என்னென்ன ஆகுமோதான்? (3)

கணக்கில்லா ஊசிகளில் நூலாய்ச் சென்று
கந்தலும்,பல் கிழிதுணியும் இணைத்தோம்; மேலும்,
குணக்குன்றாய் விளங்கி,'மிதி யடி'களுக்கே
குத்துநூ லாய் மிளிர்ந்தோம்; கோபமின்றி
வணக்கமாய் 'வலை'யானோம்; கயிறுமானோம்;
வாகனத்தின் கடிவாள மானோம்; வாழ்வில்
பிணக்கமாய் தேடினவர் எம்மை, 'வீடு'
பெற்றார்கள்; யாமென்ன பேசுவோமே? (4)

இப்படியாய் அரசனுக்கும் ஆடையாகி,
இழிகுலத்து நீசனுக்குங் கந்தலாகிச்
செப்பிடும்பல் வகையெல்லாம் மனிதர்க் கிங்கே
செயல்புரிந்தோம்; பதிலாகச் செய்ததென்னே?
துப்பிடுநீச் சாக்கடையில் தூசாய் மாய்த்தார்;
துயர் பொறுத்தோம்: துயரில்லோம்; துணிந்து நாங்கள்;
அப்படியே மறுப்பு பல செய்வோமாகில்,
'அவன்' உலகில் எமக்கிடந்தான் அரிதாய்ப் போமே. (5)

# பைரவி ★

(கு. அழகிரிசாமி)

★

இலக்கிய உலகம் தோன்றிய நாள் முதல் கவிஞர்கள் தோன்றிக் கொண்டிருக்கிறார்கள். பலபல நாகரிகங்களும், மனோபாவங்களும், லட்சியங்களும் தங்கள் ஆட்டங்களை ஆடிவிட்டுப் போகின்றன. ஆனால் கவிஞர்கள் எல்லாம் ஒரு மிக்க பிரிவுத் துயரை காதலுக்குத் தான் சொந்தமாக்கி இருக்கிறார்கள். பிரிவு என்று நினைத்து விட்டால் காதல் வாழ்க்கையின் களிப்பின் நடுவில் இருக்கும் முட்டுக்கட்டை என்றுதான் மனிதன் கண்களுக்குப் பட்டன. ஒவ்வொரு நாட்டிலும் முதன் முதல் தோன்றிய கவிஞன் அனுபவத்தை ஒட்டியோ, உலக நிகழ்ச்சியைக் கண்டோ காதலர் பிரிவை துயர பாவத்தில் பாடி வைத்துச் சென்றான். அவன் மொழியைப் 'பொன்னே போல் போற்றும்' பிற்காலத்திய கவிஞன், கலைஞன், கலா ரஸிகன் எல்லோரும் விரகதாபத்தை வெகு அழகான கற்பனைகளை இடையில் பொதித்துக் கூறி விட்டுச் சென்றனர். ஆனாலும் ஒரு சிலர், என் மனப்போக்கு இசையும் வேறொரு பிரிவையும் ஒரு வகையில் பாடி வைக்காம லில்லை.

பெரிய புராணத்தில் ஒரு பாட்டு:

"திருவாரூர் தனை நினைந்து 'சென்று தொழுவேன்' என்று
மருவார்வத் தொண்டருடன் வழிக்கொண்டு செல் பொழுதில்
ஒருவா நண்(பு) உள்ளுருக உடன் எழுந்து கை தொழுது
பெருவான வரம்பனார் பிரிவாற்றார் பின் செல்வார்"

அன்று சேரமானை சுந்தரமூர்த்தி சுவாமிகள் பிரியும் சமயம். சுந்தரமூர்த்திகளைப் போன்று முற்றிலும் வாழ்க்கை இன்பத்தை சேரமான் வெறுத்துவிட வில்லை. சுவாமிகள் "திருவாரூருக்குப் போக வேண்டும் சிவ தரிசனம் செய்வதற்கு" என்று கூறினார்கள். சேரமான் தோழமையின் பாசத்தால் கட்டுண்டு "இன்றுமது பிரிவாற்றேன்; என் செய்கேன்?" என்று புலம்பினார். அவருடைய புலப்பத்தின் முழு அர்த்தமும் எனக்குத் தெரியும். ஏனென்றால் நானும் அந்தப் பிரிவை அனுபவித்தவன் அல்லவா?

என் மனம் பழைய சம்பவங்களில் இன்னும் ஒன்றை ஞாபகத்திற்குக் கொண்டு வருகிறது. ஞான சம்பந்தரும், திருமங்கை மன்னரும் ஒருவரை ஒருவர் பார்க்க வேண்டும், பார்க்க வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்த நாளில் சந்தித்தபோது ஒவ்வொருவரும் தம்மைப் பெண்ணாகப் பாவித்து, தம் விரகத்தைத் தணிக்கும் நாயகனாக வேறொருவரைக் கொள்ள வில்லையா? நட்பின்வழிப் பிறந்த அன்பு அவ்வளவு தூரம் கனிந்து விடுகிறது.

மனம் இசைந்த பொருள், காட்சி, உயிர் எதுவாயினும் பிரிய நேரிட்டால் என் உள்ளம் துயருகிறது. உயிர் வாழும் உடல் பெண்ணுருவில் இருந்தால் என்ன? அல்லது ஆண் வடிவைத் தாங்கி இருந்தால்தான் என்ன? ஆத்ம சம்பந்தந்தானே பிணைப்பை உண்டாக்குகிறது?

சேர்ந்து ரஸித்த ஒரு இன்ப நிகழ்ச்சியை, ஒரு இன்னிசையை, பிரிவில் அனுபவிக்க நேர்ந்தால், அது வருத்த வரும் கஷ்டங்களுக்கு, முன் அறிவிப்பாக இருக்கிறது. அதன் தன்மை அப்பொழுது ஒரு கூரிய ஆயுதம் தரும் நோவை ஒத்திருக்கிறது. பின்னால் அது உள்ளத்தைக் குத்திக் கிளறும்போது, பற்பல மென்மையான சுபாவங்கள், இரக்கம், அன்பு, காதற் கவிதைகள் முதலியவைகளை சிருஷ்டிக்கும் மலரினும் மெல்லிய அந்த உள்ளம் எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்குமோ?

இந்தப் பாட்டை காதலுக்குக் கற்பித்தான் வள்ளுவன். கட்புக்கும் அதை உபயோகிக்க வேண்டுகிறேன்.

"முன்னால் இன்பம் அளித்த ஆயனுடைய வேய்ங்குழல் இப்பொழுது, தீயைப் போல சுடவல்ல மாலை வருகைக்குத் தூதாகி இருக்கிறது. உயிரைக் கொல்லும் ஆயுதம் அதுதான் போலும்"

"அழல் போலும் மாலைக்குத் தூதாகி, ஆயன்
குழல் போலும் கொல்லும் படை."

* * *

மறுபடியும் அந்தப் படக் காட்சி எங்கள் ஊருக்கு வந்தது. நான் அதை முன்பே பார்த்து விட்டேன். ஆனால் என் தம்பி கோபு அதைப் பார்க்கக் கட்டாயப் படுத்திக் கூப்பிட்டான். முதலில் அவன் வேண்டுகோளை மறுத்துப் பார்த்தேன். பின்னால் என் மனம் ஒரு மாதிரி மாறி விட்டது. ஆனால், அம் மாறுதல் அவன் வேண்டுகோளின் பலன் அல்ல. என்னுள்ளே ஒரு எண்ணம் முதலில் தடுத்தது; பின்னால் என்னைப் போகத் தூண்டியது.

கோபுவுக்கு பதினான்கு வயது ஆகிறது. சங்கீதம் கற்கிறான். கலையில் மிகவும் ரஸிகத் தன்மை உடையவன். அந்த படத்தில் ஒரு நடிகை பைரவி ராகத்தில் ஒரு கீர்த்தனம் பாடுகிறாள். அந்தக் கீர்த்தனம் தான் என்னையும் அவனையும் காட்சிச்சாலைக்கு இழுத்துச் சென்றது.

காட்சி ஆரம்பமாய் விட்டது..............கோபு எதிர்பார்த்த கட்டம் வரும் சமயம். அவன் மனத்தில் களி துளும்புகிறது. ஆனால் என் மனத்திற்கோ, காட்சியின் ஒவ்வொரு அங்கமும் பித்த மயக்கத்தைக் கொடுத்தது. சாம்பிக் குறுகிய மனது. அந்தச் சிறு இடத்தில் எவ்வளவு கஷ்டங்களை மூடிவைக்க முடியும்? மனோதிடம் தகர்ந்து சுயஸ்மரணை அற்றுப் போகும் நேரத்தில், உயிரற்று இயங்கும் அப் படம் பைரவியில் கீர்த்தனம் பாட ஆரம்பித்தது. நானும் உயிரற்றுத்தான் அங்கு உட்கார்ந்திருந்தேன். ஆனால் என் தம்பி கொள்ளும் பேருவகையைக் கேட்க வேண்டுமா?

"டேய் கோபு" என்றேன். பதில் காணோம். இரண்டு ஒலிகள் ஒரு வழியில் பிரவேசிக்க முடியாது அல்லவா? என்றாலும் மறுபடியும் கூப்பிட்டேன். அவனுக்குக் கேட்கவில்லை. அதுவும் நல்லது தான் என்று சினிமாத் தியேட்டரை விட்டு எழுந்திருந்து

வெளியே வந்தேன். வேகமாக வீட்டுக்கு வந்து கட்டிலில் படுத்தேன்.

அன்றொரு நாள்—ஒரு சில மாதங்களுக்கு முன்புதான், கோபு இன்று என்னைக் கட்டாயப் படுத்திய மாதிரி, என் நண்பன் நடராஜன் வற்புறுத்தி அழைத்துக் கொண்டு போனான். அப்பொழுது அவன் உரிமையோடு சொல்லிய ஒவ்வொரு சொல்லும் என் ஞாபகத்தினின்றும் மறக்கவில்லை. அன்று, சிநேகிதத்தின் சேர்ந்து வாழும் களிப்பைத் துலக்கும் முறையில் இருந்தது அந்தப் பைரவி ராகக் கீர்த்தனம். அதன் ஒவ்வொரு அம்சமும் உள்ளக் கமலத்தை மலரச் செய்யும் உதய சூரியன். அதே 'சூரியன்' பல நாட்களுக்கு அப்புறம், இன்று என் 'மென் மலரை'க் காய்ந்து வாட்டியது.

தூக்கம் வரவில்லை. ஸ்விச்சைத் தட்டி மின்சார விளக்கை எரியச் செய்தேன். அந்த வெளிச்சத்தில் புன்னகை பூக்கும் முகத்தோடு, அன்பு வழியும் கலையில் தோற்றம் அளிக்கும் அவனுடைய புகைப்படம் என் கண்களுக்கு பளிச்சென்று பட்டது. அதைக் கையில் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். பிறகு அதைச் சுவரில் மாட்டிவிட்டு விளக்கை அணைத்துப் படுத்தேன். பழைய சம்பவங்கள் ஒவ்வொன்றாக மனக் கண்களுக்குத் தோற்றம் அளிக்க ஆரம்பித்தன.

* * *

நடராஜனோடு ஒரு வகுப்பில் படித்துக்கொண் டிருக்கும் போது ஒரு நாள் மாலை. அவனும் நானும் வழக்கம்போலவே உலாவப் போனோம். செண்பகத் தோப்பில் உள்ள குளக்கரையில் ஒரு ஆலமரத்தினடியில் வந்து உட்கார்ந்தோம். அங்கே தான் நாங்கள் தினந்தோறும் உட்கார்ந்து கவிதைகளை ரஸிப்பது. அன்று பாரதியாருடைய "குயில் பாட்டை" எடுத்து வாசித்துக் கொண்டிருந்தோம். கொஞ்ச நேரத்தில் என் உள்ளத்தில் ஒரு ஆவேசம் பிறந்தது. என் சட்டைப் பையிலிருந்த நாட் குறிப்பையும் பென்சிலையும் எடுத்து ஒரு சிறு பாட்டிசைத்தேன். நானே அதை அவனுக்கு வாசித்துக் காண்பித்தேன். அவன் மௌனமாகவே உட்கார்ந்திருந்தான். அவன் கண்கள் இந்த உலகத்தைப் பார்ப்பதை விட்டு மன உலகத்தில் எதையோ தேடுவது போல் இருந்தன. அது இலையுதிர்காலம். மேற்கேயிருந்து வீசிய ஒரு முரட்டுக் காற்று மரங்களை ஊடுருவிக் கொண்டு செல்லும்போது, ஆலமரத்தின் பழுத்த இலைகள் 'பலபல' என்று உதிர்ந்தன. உதிர்ந்த இலைகள் ஒன்று என் தலையிலும் இரண்டொன்று தோள்மேலும் மடிமேலும் தங்கிக் கொண்டன. அப்பொழுது அவன் மௌனமும் கலைந்தது.

"அப்பா, கவிதையை அனுபவித்த இயற்கையும் உன்மீது மலர்மாரிபோல இலைகளை உதிர்க்கின்றதுதான் எனக்கு......"

"சரி சரி, இப்படிப் பேசினால் எனக்கு சகிக்கும் வழக்கம் இல்லை, நடராஜன்"

"என்ன? இது முகஸ்துதி இல்லையே? 'குயில் பாட்'டில் கண்ட விறு விறுப்பு உன் பாட்டிலும் தான் இருக்கிறதே?" என்றான்.

அப்பொழுது கருநீல நிறமுள்ள பறவை யொன்று பறந்து வந்து வற்றியுள்ள குளத்து நீரைத் தன் சிறகால் அடித்துவிட்டு ஒருவிதமான, மோகனமான குரலில் கூவிவிட்டுச் சென்றது. நீரோடு விளையாடி வெகு குறுகிய நேரத்தில் அது அனுபவிப்பது பேரின்பம்! அதைப்போலவே எங்கள் தோழமையின் ஓரிடத்துறையும் வாழ்க்கை யின்பமும் வெகு குறுகிய காலத்திற்குத் தான் என்று இப்பொழுது தெரிகிறது.

மறக்கமுடியாத ஜூன் மாதம் பத்தொன்பதாம் நாள். இலையுதிர்காலம் போய்விட்டது. இப்பொழுது கோடை. இன்னும் கார்காலம், இளவேனில், பழையபடி இலை யுதிர் காலம் எல்லாம் காலச் சுழற்சியில் வந்துகொண்டே இருக்கும். ஆனால் அந்தப் பருவங்களோடு கலந்திருந்த ஒரு பொருள் இன்னும் எத்தனை வருஷங்களுக்கு அவற்றைவிட்டு நீங்கியிருக்குமோ? யார் அறிவார்கள்? முன்னைப்போல் ருதுக்கள் இன்பந்தர வேண்டும் என்றால், பிரிந்தவர் கூடவேண்டும். பழைய நட்பு வாழ்க்கையைத் திரும்பவும் அனுபவிக்கவேண்டும், அன்றைய தினம் காலையில் நடராஜனுடைய வீட்டில் ஒரு ஜோஸியரிடம் "நல்ல நேரம் எத்தனை மணிக்கு?" என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். நான் போனேன். என்னை உட்காரச் சொன்னார்கள். நடராஜன் ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டிருந்தான். என்னைப்போலவே அவனுக்கும் "மயக்கம்."

"மத்தியானம் பன்னிரண்டரை மணியிலிருந்து நல்ல வேளை ஆரம்பிக்கிறது" என்று சொல்லிவிட்டு ஜோஸியர் எழுந்தார். விடை பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

"பெட்டியில் சர்ட்டிபிகேட்டையும் கோர்ட்டையும் எடுத்துவைத்துக்கொள், ஞாபகமாக" என்றார் நடராஜனுடைய தகப்பனார்.

அவன் தலையைப் பணிவோடு அசைத்தான். அப்பொழுது அவன் தாயார் வந்து சிநேகிதனுக்கு நன்றாகப் படிக்கும்படி புத்தி சொல்லி அனுப்பு. என்னமோ அப்பா, நாமும் முயற்சி செய்வோம். முன் மாதிரியே இனியும் அவனுக்கு பரீக்ஷையில் கடவுள் தான் துணை செய்யவேண்டும்;" என்றதும் நான் பிரதியுத்தரமாக ஒரு புன் சிரிப்பு சிரித்தேன்.

காலேஜ் படிப்புக்காக மதுரைக்குச் செல்கிறான் நடராஜன். நான் பல காரணங்களால் என் மேல் படிப்பை நிறுத்த வேண்டியது ஆயிற்று. இந்தப் பிரிவில்தான் காலதேவன் எங்கள் வாழ்க்கையைச் சோதிக்க வந்தான்.

கடுமையாக வெய்யில் அடித்துக் கொண்டிருந்தது. உச்சி வேளை கழிந்ததும் ஒரு மணி "மெயிலு"க்காக ஸ்டேஷனுக்குப் புறப்பட்டோம். நான், கையில் பெட்டியோடு நடராஜன், ஒரு குடையை பிடித்துக்கொண்டு அவன் தகப்பனார் மூவரும் ஸ்டேஷ

# இறைவனே பெருங் கொழுநன்

(S. கோவிந்தராஜ ஐயங்கார்)

வில்லிபுத்தூரார் கவிபாடும் சக்தியில் குறைந்தவ ரல்லர். ஆதலின் அவர் பாடிய பாட்டை அப்படியே வைத்துக் கொண்டு பொருள் காண்டலே தகுதி யென்பது எனது தாழ்ந்த அபிப்பிராயம்.

'ஐம்புலன்களும் போல்' என்ற பாட்டில், 'இன்னும் வேறொருவன் (ஆகிய) இறைவனே என் பெருங் கொழுநன் ஆவதற்கு எனது பேரிதயம் உருகும்,' என்று ஏன் பொருள் கொள்ள லாகாது? அதாவது கிருஷ்ண னையே காதலனாக, இறைவனாக. 'பெருங் கொழுநனாக' எண்ணி ஏன் பாஞ் சாலி உருகி யிருக்க லாகாது?

"மயிர் நீப்பின் வாழாக் கவரி மா வன்னா
ருயிர் நீப்பர் மானம் வரின்"

என்ற தமிழ் மறைக் கிணங்க, 'வசிட்டர் நல்லற மனைவியை அனையவ ளாகிய' துரோபதைக்கு, ராஜ சபையின் கண் ஆடை நல்கி, உயிரினும் சிறந்த மானங் காத்த பரந்தாமனாகிய கிருஷ்ணனைத் துரோபதை 'பெருங் கொழுநனாக' எண்ணியதில் தவறொன்று மில்லை. கடவுளிடம் காதலன், காதலி பாவனை பூண்டு பக்தி கொண்டு உருகுதல் நம் நாட்டு மரபே.

துரோபதையின் பதிகளாகிய பாண்டவரை 'ஐவரும் பதிகளாகவும்' என்றும், பரமாத்மாவாகிய கிருஷ்ணனைப் 'பெருங் கொழுநன்' என்றும், 'பெருங் கொழுநனை'க் காதலிக்கும் இதயம் 'பேரிதயம்' என்றும், துரோ பதையின் வாயிலாகக் கவி கூறியிருப்பது போற்றத் தக்கது.

**'நம்புதற் குளரோ?'** மிகுந்த வீரபராக்கிரமம் படைத்த ஒருவ ரல்ல ஐவர் கணவரா யருகில் இருந்தும், தம் காதலிக்கு இடுக்கண் உற்ற காலத்து காப்பாற்ற முடிய வில்லை. காப்பாற்றியது வேறொருவனே. ஒருவன் என்ற வார்த்தைக்கு ஒப்புவமை யற்ற ஒருவன் என்று பொருள் கொள்ளல் தகும்.

---

னுக்குப் போய்ச் சேர்ந்தோம். கொஞ்ச நேரங் கழித்து அடி வானத்தில் புகைப்படலம் தெரிந்தது. பிளாட்பாரத்தில் மூட்டை முடிச்சுகளோடு பிரயாணிகளின் சந்தடி. இரைச்சலோடு வண்டி வந்து சேர்ந்தது. எல்லோருடைய உள்ளும் புறமும் ஒரே பர பரப்பு. வண்டியில் ஏறி உட்கார்ந்தான் நடராஜன். வண்டியும நகர்ந்தது. ஞாபகமாக என்னிடம் ஒரு கைக் குட்டையைக் கொடுத்தான். அவன் முகத்தோற்றமும், வண்டியின் பார்வை யும் மறையும்போது அந்தக் கைக்குட்டையால் என் கண்களை ஒற்றிக் கொண்டேன்.........

வீடு திரும்பும்போது என் கண்கள் கண்டது ஒரு நகரத்தை யல்ல, ஒரு பாழ் வெளியை.

கடிகாரம் பத்து மணி அடித்தது. கட்டிலில் புரண்டு படுத் தேன்; உறக்கம் வரவில்லை. பழையபடியும் அந்த துயரக்கதை தொடர ஆரம்பித்தது. மதுரையிலிருந்து அவன் எழுதிய கடி தம், அதில் துள்ளி ஓடிய ஜீவ உணர்ச்சி...........

அப்பொழுது, "கண்களுக்குக் கலநீரை முத்து முத்தா யுகுக் கிறாள்" என்று அந்தக் கீர்த்தனத்தின் சரணத்தை வாய்க் குள்ளேயே பாடிக்கொண்டு வந்தான் கோபு.

"போதுமடா, உன் பைரவி" என்று என் மனத்திலுள்ளேயே சீறி விழுந்தேன்.

## தமிழ் நாட்டின் தற்போதைய நிலை

(பண்டித—எஸ். எஸ். ஆனந்தம்)

நாம் வசிக்கும் நில உலக முதல் வானில் மீன் வடிவங்களாய்க் காணப்படும் எண்ணிறந்த அண்ட கோடிகளும் அணுக்கள் போல் விண்ணில் சுழன்றுகொண் டிருக்கின்றன வெனவும், அவைகள் உண்டை வடிவமாய் இருக்கின்றன வெனவும், மேலும் நில உலகில் பாண்டி நாடே பழம் பதி யெனவும் சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் தமிழ் நாட்டுப் பெரும் புலவர் மாணிக்கவாசகர் தமிழ் நாடு பழமையானதெனக் கண்டு கூறிய உண்மை. இதனை இன்று மேல் நாட்டு நில ஆராய்ச்சிக்கார்ரர் நிலத்தையும், நிலத்தின் அடிபாகத்தையும், மலைகளிலுள்ள அடுக்குப் பாறைகளையும், ஆறுகளையும், ஆறுகளின் மணலையும், கடலின் அடிப்பாகத்தையும ஆராய்ந்து நில உலகின் ஆயுளைக் கணக்கிட்டதில் நமது தென்னுடாகிய தமிழ் நாடே மிகப் பழமையானதென முடிவு செய்துள்ளனர். இமய மெனும் பனி மலையும், வட நாடும் கடலுக்குள்ளிருந்து ஓர் கடற்கோளில் வெளிப்பட்ட புது நில மெனவும் நடுநிலை திறம்பாது கூறுகின்றனர். இவ்வாராய்ச்சியால் உலகில் முதற்கட் தோன்றிய மக்கள் பேசும் மொழியை முதன் மொழி, அது உயர் தனிச் செம்மொழி யெனக் கூறுதல் மிகையாகா.

தமிழ் வேந்தன் சேரன் செங்குட்டுவன் வட நாட்டு ஆரிய அரசர்களை வென்று இமயமலையில் புலிக்கொடி நாட்டினு னெனவும், மேலும் கண்ணகிக்குக் கல் உருவஞ் செய்ய இமயத்தில் கல்லெடுத்து அதைத் தனக்கு அடங்காத ஆரிய அரசர் தலைமேல் சுமத்திக்கொண்டு வந்தான் எனவும் கூறுகின்ற இலக்கியத்தைக் கொண்டும் இமயம் வரை தமிழ் நர்டு என்று நாம் கூற முன் வரவில்லை. விந்திய மலையையும் விட்டுவிடுவோம். வட நாட்டில் ஐதராபாத்துக்கு அருகிலுள்ள பாடாமி என்னும் வாதாபி நகரை ஆண்ட வடநாட்டரசனுகிய வர்தர்பி சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன் தமிழ நாட்டு மன்னனை மதியாது கப்பங் கட்டாதிருந்த காலத்தில் அம் மன்னனுக்கு அணுக்கராகவும் படைத்தலைவராகவு மிருந்த தமிழ் மருத்துவ வீரர் சிறுத்தொண்டர் என்பார் வட நாட்டுக்குப் படை யெடுத்துச் சென்று வாதாபி நகரை முற்றுகையிட்டு வாதாபி மன்னனை அடி பணியச் செய்து அவனிடம் நிதிக் குவியல்களைக் கப்பமாகப் பெற்று சோழநாட்டுக்குத் திரும்பியதாக பாடாமி என்ற ஊரிலுள்ள மலைக் குகையில் கல் வெட்டிருக்கின்றது. பெரிய புராணம் சிறுத்தொண்டர் வரலாற்றிலும் அது கூறப்பட்டிருக்கிறது. அதனுல் தமிழ்நாட்டின் எல்லை வடநாட்டு பாடாமிவரையில் இருப்பதாக நாம் கூற முன்வரவில்லை இவற்றை இன்று பொய்யெனக் கூறினும் தமிழ்மொழியையும், தமிழிலுள்ள ஊர்ப்பெயர்களையும், தமிழர் கட்டிய கோயில்களையும் இல்லையெனக் கூற எவராலும் இயலாது.

முருகன் தமிழ்நாட்டுக் கடவுள் என்பதும் அக் கடவுளுக்குத் தமிழ் நாட்டுக் குன்றுகள்தோறும் கோயில் உண்டென்பதும் எல்லோரும் அறிவர். திருவேங்கடம் அல்லது திருப்பதி என்னும் பெயரை முதலில் கவனிப்போம். "திரு" என்பதும் "பதி" என்பதும் தமிழா? தெலுங்கா? வேங்கடம் என்பது வேங்கைப்புலிகளுக்கும் வேங்கை மரங்களுக்கும் இடமா யிருந்தமையால் (வேங்கை + இடம்) வேங்கிடம் என வழங்குகின்றது. இது தமிழா? தெலுங்கா? முன் முருகன் கோயிலாகவும் இன்னும் அதில் கடவுளாய் விளங்கும் உருவம் முருகன் உருவம் என்பதற்கும் ஆதாரம் இன்றும் காணக்கிடக்கிறது. குன்றுகளில் கோயில் கொண்ட முருகனைப் பாடிய அருணகிரிநாதர் திருப்புகழ் முதலிய பாடல்களிலும், வேறு பல பாடல்களிலும் திருப்பதியி லிருக்கும் கடவுளை முருகன் என்றே பாடி யிருக்கின்றார்கள். இது உடையவர் என்னும் இராமானுசர் செல்வாக்கினால் விஷ்ணுகோயிலாக மாறினது என்பதும் வரலாறு கூறுகின்றது. கர்ண பரம்பரையாகவும் வழங்குகிறது.

சித்தூர் மாவட்டத்திலுள்ள சீகாளத்தி (திருக்காளத்தி) எனும் சிவன் கோயில் பொன்முகரி ஆற்றின் கரையில் உள்ளது. கண்ணப்ப நாயனார் கதை நிகழ்ந்த இடம் காளத்திமலை யாதலால் அது தமிழ்நாடே யாகும். காளத்தி என்ற ஊர் இப்பொழுது காளாஸ்திரி என வழங்கத் தலைப்பட்டது. சித்தூர் மாவட்டமும் தெலுங்கு மாவட்டமாக கருதப்படுகிறது. தமிழ்நாடு நிலவளத்திலும் நீர் வளத்திலும் சிறந்ததா யிருப்பதாலும் அதன் வடகரையில் தெலுங்கர் வசிப்பதாலும், தமிழர் அண்டினவரை ஆதரிக்கும் பண்புடையவ ராதலாலும் மிக் விரைவாகவும் எளிதாகவும் தமிழ்நாட்டில் தெலுங்கர் நாள்தோறும் வந்து சேர்ந்து தங்கள் தொகையை பெருக்கிக்கொண்டு தமிழ்நாட்டு எல்லையை தங்கள் எல்லையுடன் சேர்த்துக்கொண்டே வருவதோடு தமிழ்நாட்டையும் தங்கள் நாடாக்கிக்கொண்டு வருகின்றனர்.

சென்னை மாநிலத்தில் வழங்கும் தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம், முதலிய மொழிகளுக்கெல்லாம் தாய்மொழியாகிய தமிழ்மொழி முற்காலத்தில் உயர்தனிச் செம்மொழியாய் முதலிடம் பெற்றிருந்தது. சென்னை மாநில மக்களில் தொகைப்படி தமிழரே சுமார் மூன்று கோடிக்கு மேலிருந்தனர். தமிழகத்தின் கடைக்கால எல்லை முற்காலத்தில் தெற்கே கன்னியாகுமரியும், வடக்கே குன்றுகள் சூழ்ந்த குண்டூர் எனும் குன்றூரும், பின்னர் நெல்விளைவில் சிறந்த நெல்லூரும் கிழக்கே மேற்கே கடலு மாகும். இந் நான் கெல்லைக் குட்பட்டிருந்தது தமிழ்நாடு. நாளேற நாளேற குன்றூரும் நெல்லூரும் தெலுங்கு நாடுகளாக மாறின. அதன் பின்னர் திருப்பதி எனும் திருவேங்கடமும் திருக்காளத்தி எனும் கண்ணப்பனூரும், திருத்தணிகை என்னும் முருகன் கோயிலும் அடங்கிய சித்தூர் என வழங்கும் சித்தூர் மாவட்டமாகிய தமிழ்நாட்டைத் தெலுங்கர் தங்கள் எல்லையில் சேர்த்துக் கொண்டனர். அதையும் தமிழர் கவனிக்கவில்லை. (தொடரும்.)

# விஞ்ஞானம் விரைதல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)

★

..கஞ்ச காரருஞ் செம்புசெய் குநரும்
மரங்கொல் தச்சருங் கருங்கைக் கொல்லரும்
கண்ணுள் வினைஞரு(ம்) மண்ணீட் டாளரும்
பொன்செய் கொல்லரு நன்கலந் தருநரும்
கிழியினுங் கிடையினுந் தொழில்பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்கள்........

—சிலப்பதிகாரம்.

புதுக்கற்காலம் சிலவாயிர மாண்டுகளே நீடித்திருந்தது. அவ்வாண்டுகள் கடந்து வந்த காலை, 'கிட்டக் கிழக்கு நாடுகள்' என்று இப்பொழுது வழங்கப்பட்டு வருகின்ற பூப்பிரதேசங்களின் சீதோஷ்ண நிலைமை உலர் வண்ணமாய்க் கொண்டே வந்தது. அங்கிருந்த வளமிக்க புற்றரையாலான பெரும் நிலப் பரப்புகள் பல காய்ந்தன. இவ்வாறு மேலும் காய்ந்தமையின், அவற்றின் வளப்பம் குன்றி, அவ்விடங்கள் வரண்டன. அவ்விடங்களில் வேளாண்மை நடத்தி வாழ்ந்து வந்த மக்கள் சமுதாயங்கள் பல விருந்தன. அம்மக்கள் விவசாயத்தின் பாற்பட்ட வினைசெய் வகைகளை விருத்தி செய்து, அத்தொழிலில் மேன்மையுற்றிருந்தனர். அவ்வாறனவராயினும், நிலங்கள் வரட்சியுற்று வளம் குன்றியதால், அவர்கள், வாழ்க்கை நடாத்தல் கடினமாயிற்று. ஆதலின், இடையறாது நீர் பாயும் வசதிகள் வாய்த்த புலங்களைக் கண்டு பிடிப்பதற்கென, தேவையால் தூண்டப்பட்டவர்களான அன்னாரின் நாட்டம் சென்றது. நீலநதி போன்ற பேராறுகளின் கரைகளிலுள்ள நிலப்பகுதிகள் அவர்களது விருப்பத்தை நிறைவேற்றும் வண்ணமா யிருந்தன. அந் நிலப் பாங்குகளை அவர்கள் பெரிதும் மதித்தனர். அவை, என்றும் வற்றாது நீர் பாய்கின்றவை என்றான நலத்துடன் இருந்தவையுமன்றி, மற்றொரு வகையிலும் சிறப்புற்றிருந்தன. ஒவ்வோர் ஆண்டும், ஆற்றில் பெருக்க மேற்படும காலங்களில், தண்ணீர் கரை புரண்டோடியமையின், அக்கரைகள் மீது, ஆண்டாண்டுதோறும், புது வண்டல் படிந்து வந்தது. அதனால், அப்புலங்கள் என்றும் குன்றாத வளத்துடன் இருந்தன. அவ்வாறான நிலங்களில், ஒரு போகத்திற்குப் பின் மற்றொரு போகமாய், தொடர்ந்தாற் போல் சாகுபடி செய்ய முடிந்தது. அறுவடையான பின், அவை மீண்டும் உரம் பெறுதற்கென, பல மாதங்கள் அந் நிலங்களைப் பயிரிடாது விட்டு வைத் திருக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. வளமிக்க நிலங்களில் குடியேறியவரான மக்களுக்கு, அவற்றைவிட வளமதிகமான புதுப் புலங்களை நாடி, வேற்றிடம் செல்ல வேண்டுமெனும் அவா

தோன்றக் காரணமில்லை. எனவே, ஆற்றங்கரைகளை யடைந்த வேளாண்மக்களின் இருக்கை நிலைத்தவாருன தாயிற்று. இங்ஙனம், மக்கள் சிலரிடமின்று நன்னிலம் நாடித் திரிதல் என்றுனவியல் மறைந்தது. நதி தீரங்களில், அவர்கள், நிலைவண்ணமான வாழ்க்கையை நடாத்தலாயினர். நிலையான வாழ்க்கைமுறை, கூட்டுறவியலான தொழின் முறைகள் பல தோன்றுதற் கேற்ற வாருய் அமைந்தது.

நீல நதியைச் சூழ்ந்துள்ள பள்ளத்தாக்கிலும், யூப்ரடிஸ் ஆற்றின் படுகை யிடங்களிலும், இருந்த நிலப்பரப்புகளே, முதன் முதலாய்க் கண்டு பிடிக்கப்பட்டனவான, விளைவு குன்றுத நிலங்களாம். அவை, ஆதியில், பெரும் சதுப்பு நிலங்களால் சூழப்பட்ட மேடுகளா யிருந்தன. அம் மேடுகளின் பாற்பட்ட நிலப்பரப்பு வளமிக்கதாயினும், அளவில் சிறிதானது; அங்கு குடியேறிய புதுகற்காலத்து வேளாளர் செழித்தனர். நாளடைவில், அவர்கள், சிறிது சிறிதாய், மேடுகளைச் சூழ்ந்திருந்த சதுப்பு நிலங்களிலிருந்த நீர் வடியுமாறு செய்தவராகி, விவசாயத்திற்கான நிலப்பரப்பின் அளவைப் பன்மடங்கு அதிகமாக்கினர். அப்பேராறுகளுக்குச் சுற்றிலுமிருந்த பள்ளத்தாக்கு நிலங்களில், பெரும்பாலான பகுதிகளில், நீர் வடிந்திடுமாறு செய்து, அவற்றைத் திருத்தி மீட்டல் என்றுன பெரும் பணியை, அவர்கள், செய்து முடித்தனர். யூப்ரடிஸ் ஆற்றைச் சார்ந்த பள்ளத்தாக்கில், நாணல்களால் கட்டப்பட்ட தெப்பங்களை, சதுப்பு நிலங்கள் மறையுமாறு, மிதக்கவிட்டு, நீர் வடிந்த செம்மையான நிலங்களை அடைந்தனர்.

மேற்கூறியவாறு வினைசெய் வகையான அரும்பெருஞ் செயல்களை மக்களாற்றியதனுல், நலங்கள் பல விளைந்தனவாயினும், பெருங்கேடொன்றும் விளைந்தது. அக்கொடும் விஷக்களை, 'மக்களில் மந்திரவியலான கற்பனை மூட்டப்படுதல்' என்றுன மாயக்களை யெனலாம். செயற்கரிய கருமங்கள் செய்து முடிக்கப் படுவதையும், காணற்கரிய காட்சிகள் தோன்றுதலையும், கண்டவரின் மனத்தில், திகைப்பும் அதிசயமும் எழுதல் இயல்பு. அப்பொழுது, அவர்கள், தாம் கண்டவையான விசித்திரங்கள், தம்மாலறியப்படாத தொன்றுன மாயசக்தியின் துணையால் எழுந்தவையே என்றெண்ணி ஆறுதல் அடைதல் எளிதாயுள்ளது. இவ்வகையில், மக்கள் மனத்தில் மந்திரவியலான கருத்து எழுவதற்கும், மந்திரத்தில் நம்பிக்கை ஏற்படவும் ஆயிற்று. நன் முறையில், நிகழ்ச்சிகளுக்கான காரணம் அறிய வேண்டுமாயின், கருத்தூன்றிக் கவனித்தலும்—ஆழ்ந்து ஆராய்தலும்—சிந்தையூன்றிச் சிந்தித்தலும்—செம்மையான செயலும்—இன்றியமையாதவை. அவ்வகையான பயிற்சியைப் பெறுதல் அரிது; ஆயினும், அவ்வரும் முறையே அறிவு வளர்ச்சிக்கும், செயல் சிறத்தற்கும் ஏற்றது. 'மந்திரத்தாலானது' என எதற்கும் எளிதில் காரணங் கூறி விடலாம். ஆனல், அம்முறையில் அறிவுப்

பெருக்கத்திற்கும், செய்கைத் திறமைக்கும், இடமில்லை; மக்கள் அறிவீனமே அதிகரிக்கும். மக்கள் பேதைமையை வளர்த்தே மந்திரம் ஓங்குகின்றது. எனவே, அது மக்களின் நல்வழியான முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை போடும் இயல்பினது. நற்பயிர்கள் ஓங்கி வளராதவாறு, களைகள் இடையூறு செய்கின்றன. அதுபோன்றே, நல்லறிவும், நற்செயலும் ஓங்கி வளர்தற்கு, மந்திரம் இடையூறாய் உள்ளது. அதனாலேயே 'மந்திரவியல்' 'கடும் விஷக்களை' யென மேலே குறிப்பிடப் பட்டது. அப்படி முளைத்த களை, உடனே வேருடன் பிடுங்கப்பட்டு களையப்படாததாகி, மேலும் மேலும் படருமாறு விடப்பட்டது. அதாவது, மந்திரவியலான கருத்து, தடைப்படாததாகி, மேலும் மக்களிடையே பரவலாயிற்று. அவ்வாறு பரவியதற்குக் காரணம், அக்காலத்தே அரும் பெருஞ் செயல்களை விளைவித்த சிலர், தற்பெருமையால் தூண்டப்பட்டு, தன்னலம் கருதி, பாமரரையே மாற்ற முற்பட்டதினலேயே எனக் கொள்ளல் வேண்டும். தாம் பெற்ற அறிவைப் பலரும் அறியும் வண்ணம் விளக்கி வெளிப்படுத்தாது, பொதுமக்களிடை முதலில் தோன்றிய அதிசயவியலான உணர்ச்சியை அதிகரிக்கச் செய்கின்ற வகையாய், அவ்வறிவை மூடுமந்திர மாக்கினல், இலாபம் பெறலாம், என்ற எண்ணம் சிலரில் எழுந்தது. அப்படிச் செய்தால், தொழில் செய்யும் அல்லலினின்று விடுபடலாம்—உழைப்பினின்று தப்பி விடலாம்-மக்கள்மீது ஆட்சி செலுத்தலாம்—என, அவர்கள் கண்டனர். இவ்வாருன சிலமற்ற நோக்கங்களால் தூண்டப்பட்டு, அச்சிலர், மந்திரவியலான கருத்து மக்கள் மனத்தில் வலிவுறுதற்கான வகைகளில் வேலை செய்யலாயினர். அவரறிவிற் கெட்டாதவை யெல்லாம், மந்திர வியலானவை என்ற கருத்தை மக்களுக்குப் புகட்டி, மக்களின் மனப்போக்கு மந்திரவியலான வழிகளில் செல்லுமாறு செய்தனர். இதனல், மந்திரவியல் ஓங்கலாயிற்று. பல துறைகளின் பாற்பட்ட அறிவு விளக்கங்களும், செயற்கரிய செயல்களும் மக்களாலேயே ஆற்றப்படுதலைத் தம் கண்முன்னேயே கொண்டவரான கற்காலத்தினரிடையும் மந்திரத்தின் மகத்துவம் மறையாதுள்ளது. இதைக் கருதுங்கால், அக்காலத்து மக்கள் மந்திரத்தால் வயப்பட்டனர் என்பதில் வியப்பொன்று மில்லை. மக்கள் பேதைமையை மூலமாய்க் கொண்டு, மக்களை மக்கள் ஏமாற்றி நலம் பெற்று, உயர்வடையும் வழி முதன்முதலாய் ஏற்பட்டது. மந்திரமே, நேர்மையான அறநெறியினின்று வழுவிய அறிவுக்கு, முதல் எடுத்துக் காட்டாம். அறிவும் சீலமும் இணை பிரிந்து, புதுக்கற்காலத்துச் சமுதாயங்களின் சீர், கெடுதற்கு மந்திரமே முதற்காரண மானது, எனலாம்.

இனி, புதுக் கற்காலத்தின் இறுதிப் பகுதியில், மந்திர வியலான நோக்கம் பரவிய விதத்தைப்பற்றிக் கூறலாம். 'ஒரே மாதிரியான உருவுடனுள்ள பண்டங்களிடை மந்திர வியலான தொடர்புண்டு; ஒரே மாதிரியான திறமுள்ள பொருள்களும் மந்திர விய

லான தொடர்புட னுள்ளவை' என்ற நம்பிக்கை அக்காலத்தில் பரவியிருந்தது. இவ்வகையில், பலவகையான இரத்தினங்களும் அருமையான கனிப்பொருள்களும் (மினரல்ஸ்), மந்திரம் வாய்த்தவை என மதிக்கப்பட்டன. மாலகைட் என்ற கனிப்பொருள் பச்சை நிறத்துடன் மிளிர்வது; செழித்த பயிர்களும் பசுமையானவையே; ஆதலின், அக்கல், உளத்திற்கான மந்திரச் சின்னமாயிற்று. யோனி உருவினவாயின. சோழிகளும் வளத்தின் அறிகுறிகளாயின. இவ்வாறான மந்திரவஸ்துகளாலான தாயத்துகளை தங்கள் மனைவியரும், தாம் வளர்த்து வந்த விலங்குகளும், தம் நிலங்களும் அணியுமாறு, அம் மக்கள் செய்தனர். அப்படிச் செய்தலானது, அவையெல்லாம் திண்மையாய் வளமுறுதற்கான பிணையென அக்காலத்து மக்கள் உறுதியாய் நம்பினர். விவசாயத் தொழிலில் ஏற்பட்ட விருத்தியால், தானியங்கள் பெருவாரியாய் விளைந்தனவாதலின், உணவுக்குத் தேவையானதை விடப் பன்மடங்கு அதிகமான தானியங்கள் பெறப்பட்டன, அவ்வாறு மிகுதிப்பட்ட தானியங்களைத் தந்து, அவற்றிற்கு ஈடாய், மந்திரமான பண்டங்களை மக்கள் பெறலாயினர். இவ்வாறு, பண்டமாற்று முறை, முதலில் மந்திரத்தை யொட்டியே ஏற்பட்டது. வேளாண்மை தொழிலின் முன்னேற்றம் விளைவித்த தானிய மிகுதியினின்றும், மந்திரப் பண்டங்கள் வேண்டப்பட்டதாலான தேவையினின்றும் பண்டமாற்று வணிகம் எழுந்தது. வணிக முறையில், பல்வேறு நாடுகளில் கிடைக்கபபடுகின்ற பொருள்கள் ஒரே இடத்திற்கு வந்து சேர்கின்றன. புதுக்கற்காலத்து வேளாளர், வளமான சமவெளிப் பிரதேசங்களிலிருந்தனர். அவ் விடங்களில் இரத்தினங்கள் கிடைத்தல் அரிது. இரத்தினங்கள் மலைப்பாங்கான இடங்களிலேயே அகப்படும். வணிக முறையென்றான புதுமுறை கண்டு பிடிக்கப்பட்டமையின் மலைகளில் அகப்படுகின்ற பலநிறக் கற்கள், சமவெளிகளிலுள்ளவர்க்கும் கிட்டின. சமவெளி மக்கள், பாண்டங்கள் உண்டாக்கும் வகைகளில் தேர்ச்சி யடைந்தவர். ஆதலின், அவர்கள், பல வெப்ப நிலைகளுக்கான சூட்டியலின் பாற்பட்ட வினைசெய் வகைகளை அறிந்திருந்தனர். அவ்வகைகளால், தாம் பெற்றிருந்த பல நிறக் கற்களை கடுஞ் சூட்டுக் குட்படுத்தியதினின்றும் ஏற்பட்டவையான விளைவுகளைக் கவனிக்கலாயினர்.

மிளிரும் நிறங்களுடன் நேரிடும் கனியியல் பொருள்கள் பல, உலோகங் கலந்த கட்டிகளானவை. நாம், பச்சை நிறக்கல் என முன்பே குறிப்பிட்ட 'மாலகைட்' என்பது 'செப்புக்கார்பனேட்' என்பதின் வகைகளிலொன்று. கட்டைக்கரி எரிதலால் எழுவதான தீயின் மீது, கடுங் காற்றடிக்குமாறு செய்து, பின், அவ்வாறான கடுங்காற்றின் வீச்சுக் குட்பட்ட தணலில், 'மாலகைட்' துண்டொன்றை யிட்டால், அதிலுள்ள கார்பனேட் பகுதி, கரித் தணலால் அகற்றப்படும். மாலகைட்டிலுள்ள கார்பனேட் அகற்றப் படுகின்றமையின், எஞ்சிய உலோகமான செம்பு வெளிப்படும், அவ்வாறு மிளிர்ந்தோடும் செப்புச் சிறுமணிகள் காணப்படும்.

இவ்வகையான விளைவு பன்முறை நேரிட்டதை, அக்காலத்தினரில் மிக்வும் முன்னேற்ற மடைந்தவரான எகிப்து (நீலநதிப் பள்ளத் தாக்கு) நாட்டினரும் சிலர் கண்டிருக்கலாம். அவ் விளைவிற்கான காரணத்தையும், அதன் முக்கியத்துவத்தையும் அவர்கள் அறிந் திருக்கலாம். அதனுல், கனிப் பொருள்களைக் காய்ச்சி யுருக்கி உலோகங்களை யடையும் வினை வகைகளைப் பொருத்ததான அறிவு சிறிது ஏற்பட்டிருக்கலாம். உலோகக் கற்களை உருக்கும் வேலையின் பாற்பட்ட (மெடலாஜிகல்) விஞ்ஞானத்தை யொட்டி பெறக்கூடின வான விளைவுகளைப் பற்றியும் சிந்தனை செய்திருக்கலாம். இவ் விஞ் ஞானப் பகுதியின் துணைகொண்டு விளைவிக்க இயன்ற பலன்கள் எவ்வாருனவை யெனவும் ஒருவாறு காணப்பட்டது. உலோகங் களைக் கொண்ட கனியியல் கற்களேயன்றி கலப்பற்ற உலோகத் துண்டுகளும், அக்காலத்திற்கு முன்னரே அகப்பட்டிருக்கலாம். அவ் வகையில், செம்பு-இரும்பு-பொன் என்ற உலோகங்கள் நீண்ட காலத்திற்கு முன்னே அறியப்பட்டிருக்கலாம். ஆனுல், கலப்பற்ற உலோகங்கள் இயற்கையில் இருப்பது அரிதானமை யின், அவை அரிதாகவே கிடைத்திருக்கும். அவையும் கற்கள் வகையானவையே யெனக் கருதப்பட்டவையாகி, தனிப்பட்ட வகை யான பொருள்கள் என்ற வகையில் கவனஞ் செலுத்தப்படாது, விட்டப்பட் டிருக்கலாம். சூட்டைப்பற்றின விஷயங்கள் பலவற்றை, நன்கு தெரிந்து கொண்ட பின்னரே, கற்களைப் பலவகையான நிலைமைகளில், பல வகைப்பட்ட அனல்களிலிட்டு, காய்ச்சிப்பார்க்க இயன்றது. ஆதலால், அப்பொழுதே, கற்களும்—உலோகங் களும் வேற்றியலான கட்டிகள் என அறிய நேர்ந்தது. குயத் தொழில் சிறந்திராவிடின், அனல்பாற்பட்ட தேர்ந்த அறிவு ஏற் பட்டிருக்காது. எனவே, பாண்டங்களைத் திருத்தமாய்ச் செய்ய இயன்றதாலேயே உலோகங்கள் பிரித்தெடுக்கப்பட்டன என லாம். ஒரு வகையான தொழின்முறை சிறத்தலால், மற்ருேர் வகையான தொழில் பிறந்தது. அது வளர்ந்து, அதன்பாற் பட்ட அறிவுத் தேர்ச்சி யடைவதால், இன்னுமோர் தொழில் ஓங்கலாம். இங்ஙனம் தொழில்வளம் மேலும் மேலும் பெருக்க மடைகின்றது. இயற்கை நிகழ்ச்சிகளுக் கென்ருன காரணங் களைக் காணும் வகையான அறிவு அல்லது விஞ்ஞானம், இவ் வழியைப் பின்பற்றியே முன்னேற்ற மடைகின்றது. இவ்வகைக் யானது, 'விஞ்ஞான வழியே புதுமை கண்டு பிடித்தல் முறை' (ஸயண்டிபிக் டிஸ்கவரி) யெனப்படுகின்றது. எனவே, 'குயத் தொழின் முறைச் சிறப்பு, உலோகத் தொழிலுக்கு வழி காட்டி யது' என்பது, 'விஞ்ஞான வழியே புதுமை கண்டுபிடித்தல் முறை'யை விளக்குதற்கான, சிறந்ததோர் எடுத்துக் காட்டாம்.

(அடுத்த இதழில் முடிவுறும்.)

# தூக்கி வைத்துப் பேசுதல்

(" ரகுநாதன் ")

அன்றைக்குத் தபாலோடு, ஒரு புஸ்தகமும் வந்திருந்தது; அதனோடு ஒரு கடிதமுங்கூட. உடைத்துப் பார்த்தேன். எனது நண்பர் ஒருவர் தாம் எழுதிய புஸ்தகம் ஒன்றையும், அதைப்பற்றிய எனது அபிப்பிராயத்தையும் எழுதச் சொல்லி ஒரு கடிதமும் அனுப்பியிருந்தார். புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தேன். எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. மேலட்டையின் பளபளப்பு மட்டும் பார்க்கப் பளீரென்றிருந்தது. ஏதேதோ வேதாந்த ரகஸ்யங்களைப்பற்றியெல்லாம் விளாசித் தள்ளியிருந்தார். எனக்கு வேதாந்த மென்றாலே, வேப்பங்காய்; அதிலுங் கூட, கொஞ்சங்கூட, பழுப்பேறி விடாத அசல் பச்சைக்காய். என்னவெல்லாமோ தத்துவங்களை யெல்லாம் பக்கம் பக்கமாகத் திட்டியிருந்தார். நண்பர் என்னமோ கொஞ்சஞ் சிரமம் எடுத்துத் தான் புஸ்தகத்தை எழுதியிருக்கிறார் என்று அறிந்து கொண்டேன், விஷயங்களே எனக்குப் புரியாமல் போனாலுங்கூட. உடனே, ஒரு கடிதம்: "தாங்க ளனுப்பிய நூலைப் படித்துப் பார்த்தேன் பார்க்கப் பார்க்க ரொம்ப அழகாயிருக்கிறது. எவ்வளவோ சிரமமெடுத்து இந்நூலை எழுதியதற்காகத் தங்களைப் பாராட்டுகிறேன். இந்த நூலைத் தமிழர்கள் அபரிமிதமாகப் போற்றி, தங்களுக்கு எவ்வளவோ ஆதரவு அளித்து, தங்களை மேன்மேலும் இது போன்ற பணிகளாற்றத் தூண்டுவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு ரொம்ப உண்டு" என்று எழுதிப் போட்டுவிட்டேன். அவருக்கு இவ்வளவாவது செய்ய வேண்டாமா? இரண்டுநாள் கழிந்தது. நண்பரிட மிருந்து, மீண்டும் ஒரு கடிதம். "தாங்கள் எனது "........வேதாந்த ரகஸ்யம்" என்ற புத்தகத்திற்கு எழுதியிருந்த புகழுரையைப் பார்த்தேன். தமிழ்நாட்டில், தங்களைப் போன்றவர்கள் என்னைக் கௌரவப்படுத்தினால் தான் எனக்கு மேன்மேலும், ஊக்கம் வளரும். தங்கள் நகரில் சிறந்த அபிமானிகள் பலருண்டு என்று எனக்குத் தெரியும். ஆதலால், இதோடு என்னுடைய புத்தகங்களில் ஐம்பது பிரதிகளையும் அனுப்பி வைக்கிறேன். அதைக் கொஞ்சம் உங்கள் ஜனங்களிடை விற்பீர்களானால், தங்களுக்கு நான் என்றும் நன்றியுடையவனா யிருப்பேன். சிரமத்திற்கு மன்னிக்கவும்" என்று எழுதி யிருந்தது. எனக்கு பரம சங்கடமாய் விட்டது. "எதுக்கடா, இப்படி அவரைத் தூக்கி வைத்துப் பேசினோம்" என்று அடித்துக் கொண்டேன். அவர் அனுப்பிய ஐம்பது பிரதிகளையும் விற்பதென்றால், எவ்வளவு கஷ்டம் என்று அதைப் படித்து 'ரஸித்த' எனக் கல்லவா, தெரியும்! மூச்சுப் பேச்சு காட்டாமல், அந்தப் புத்தகங்களை ஒரு மூட்டை கட்டி, மூலையிலே தூக்கி யெறிந்தேன். நண்பரிடமிருந்து பல கடிதங்கள் வந்தன. ஆனால், நானோ பதில் போடுவதாயில்லை என்று ஒற்றைக்காலில் தபஸ் செய்தேன். "சரிதா

ணய்யா, நீர் விற்றது போதும். புத்தகங்களையாவது அனுப்பி வையும்" என்று அவர் எழுதினால், கொஞ்சங் கூடத் தயக்கமின்றி, அடுத்த தபாலிலேயே அனுப்பி யிருப்பேன். ஆனால், அவர் அப்படி எழுதினால்தானே! "தாங்கள் எனக்கு ஊக்க மளிப்பீர்கள் என்ற நம்பிக்கை இன்னுந் தளரவில்லை. எதற்கும் கூடிய சீக்கிரம் அதை விற்று......சிரமத்திற்கு மன்னிக்க." என்று தூக்கி வைத்துத்தான் எழுதி வந்தார். இப்படித் தூக்கி வைத்துப் பேசுபவரை என்னய்யா செய்வது? ஒன்றுஞ் செய்ய முடியவில்லை. எல்லாம் ஒரு தடவை தூக்கி வைத்து எழுதியதின் பயனாக, நண்பரும், அந்த 'பிளேட்டை' நம்மிடம் திருப்புகிறார் என்று எண்ணிக்கொண்டேன்.

தூக்கி வைத்துப் பேசுதல், நம்மில் சகஜமாகி விட்டது. பள்ளிக்கூடத்தில் படிக்கின்ற மாணவர்கள் கூட, உபாத்தியாயர்களை 'தாஜா' பண்ணினால்தான் ஏதோ பரீட்சை சமயங்களில் அவர்களது 'அருட்கடைக் கண் பார்வை' தங்கள் மீது விழும் என்று நம்புகிறார்கள். அதிலே, ஜயங் கூடப்பெற்று, நாலுகாலில் பாய்வார்கள் கண் மூக்கு தெரியாமல். உபாத்தியாயர்களைப்பற்றிப் பார்த்தால் கூட இதே கதைதான். தலைமை உபாத்தியாயரைக் காக்காய் பிடித்து, அவர் சொன்னதற்கெல்லாம் அழகப்பன் காளைபோல, 'ஆமா' பட்டம் போட்டுத் தூக்கி வைத்துப் பேசுகிறார்கள். காரணம்: தமது வேலை காயமாக. தூக்கி வைத்துப் பேசுதலை, நாம் காணாத இடமில்லை; கேட்காத இடமுமில்லை. கீழ் உத்தியோகஸ்தர்கள், மேலதிகாரிகளைத் தாஜா பண்ணுவது சர்வ சாதாரணம். ஏனென்றால், பதவியில் உயர்வதெல்லாம் மேலதிகாரிகளை, 'குளிசை' போடுவதால்தான். ஆலிவர் கோல்டு ஸ்மித் கூட, "வாழ்க்கையில் உண்மையோடு உழைப்பவன் முன்னேறுவதை விட, தூக்கி வைத்துப் பேசுபவன்தான் அதிகப்படி முன்னேறுகிறான். ஆனால், பின்னவன் நாயைப்போல, தனது மேலதிகாரிகளின் பின்னால் நாக்கைச் சொட்டை யடித்துத் தொங்க விட்டுக்கொண்டே செல்வான்" என்கிறான். (கோபம் வேண்டாம், ஸ்வாமிகளே! நான் சொல்லவில்லை. சொல்வது கோல்டுஸ்மித்!)

தூக்கி வைத்துப் பேசும் வழக்கம் உலகில் இல்லாவிட்டால் வாழ்க்கை கூட, இனிக்காதுதான். ஆனால், கையாள வேண்டிய இடம் பார்த்து, 'நாசூக்'காக, கையாளவேண்டும். அதற்கு என்னைப்போல் நாலைந்து தடவை பட்டால்தான் தெரியும்.

நண்பன் ஒருவன் எனக்கு உண்டு. உயிர்க்குயிரானவன். அவனுக்கு இன்னுங் கலியாணம் ஆகவில்லை. கலியாணமாகக் கூடிய 'ஸீஸன்'தான். பெண்கூட நிச்சயமாகி விட்டது. அவனுக்கு சஹதர்மணியாக வந்து வாய்க்கப் போகும் அணங்கை நான் பார்த்திருக்கிறேன். அன்று அவனிடம் பேசிக்கொண்டிருந்தேன். "டேய், நீ யோக்க்காரன் தாண்டா. உனக்கு வந்து சேரப் போகிறாளே, ஒரு பெண். அவளை அன்றைக்குப் பார்த்

தேன். என்ன ஷோக்கு! என்ன அழகு! தேவலோகத்து ரம்பை தாண்டா, அவள்!" என்றெல்லாம் அளக்க ஆரம்பித்தேன். ஆம். தூக்கி வைத்துப் பேச ஆரம்பித்தேன். நண்பனால் பொறுக்க முடியவில்லை! வேறொன்றுமில்லை. சந்தோஷந்தான்! "வாஸ்தவ மாகவா?" என்று வாயைப் பிளந்தான், அவன்.

ஆனால், இதே நண்பனுக்கு, நாளை கலியாணம் ஆனவுடன், ஒருநாள் அவனிடம் போய், "எய்-உன் மனைவியை நேற்று உன் வீட்டு ஜன்னலோரம் பார்த்தேன். அட்டா! என்ன அழகு! முன்னே யிருந்ததை விட, இப்போ ஒருபடி கூடத் தாண்டா, இருக்கு! அவள் தலைசீவிப் போட்டு, பொட்டு வைத்து நின்ற ஒயிலைப் பார்த்தால்......" என்று நான் பேசினால், என் கதி என்ன? முதுகிலே பலமாக வாங்கிக் கட்டுவதைவிட, வேறு மிச்ச முண்டா?

இதனால், என்ன தெரிகிறது? இந்தத் தூக்கி வைத்துப் பேசும் பேச்சை, சமயா சந்தர்ப்பம் தெரிந்து உபயோகிக்க வேண்டும். அதற்கும் ஒரு தனித்திறமை வேண்டும் என்பது தானே!

வீட்டு எஜமானி—ஆம். மனைவி இருக்கிறாள். காப்பியை ஊற்றிக் கொண்டு வருகிறாள். புருஷன் குடிகிறான். அது காப்பிமாதிரி யில்லை; கஷாயம் மாதிரி இருக்கிறது. ஆனால், "காப்பியைப் பாரு, காப்பியை" என்று கணவன், கொஞ்சம் சிறிவிட்டால் போதும். உடனே, மனைவி, அவன் முன்னே மூன்று கோட்டை முதலைக்கண்ணீர் வடித்து, 'ஆருகி யிருதடங்கண் அஞ்சன வெம் புனல் சோர' நின்று விடுவாள். மறுநாளே, ஒரு வேளை, தாய் வீட்டுப் பயணம்; இரவில், கணவனுக்கு ஏகாதசியும் வந்து விடும். இதற்குப் பதிலாக, "காபி ரொம்ப பேஷ்!" என்று தூக்கிப் பேசினாலும் ஆபத்துத்தான். "நன்றா யிருக்கிறதா, அப்படியானால், கூடக் கொஞ்சம் சாப்பிடுங்கள்" என்று ஆசார உபசாரங்கள் ஆரம்பமாகி விடும். கஷாயத்தை, காபி என்று ஒப்புக்கொண்ட பலன்தான் கைமேல்! ஏனய்யா இதெல்லாம்? எல்லாம் அந்தத் தூக்கி வைத்துப் பேசுதலின் அனர்த்தந்தான்.

ஒரு பிரசங்கி இருக்கிறார். ஏதோ, அவரும் கொஞ்சம் நன்றாகப் பேசுவார். அன்றைக்கும் அவர் மேடைமீது பேசிக்கொண்டிருந்தார். 'பொரி பொரி' என்று பொரிந்து கொண்டிருக்கார். ஜனங்கள் ஆரவாரித்தனர். இடையிடையே "ஹியர், ஹியர்!" என்ற குரல்கள். சே! தமிழன் ஆங்கிலத்தில் சொல்லலாமோ! என்று கூட்டத்தில் ஒரு ஆத்மா துடிக்கிறது. உடனே, "கேண்மினோ கேண்மின்!" என்ற தனித்தமிழ் காற்றில் கலக்கிறது. பிரசங்கியை இதெல்லாம் தூக்கி வைத்துப் பேசுதல்தானே! உடனே, பிரசங்கிக்கு 'ஜோர்' பிறந்து விடுகிறது. ஆவேசமும் அதிகரித்து விடுகிறது. அப்படியே ஆனந்த ஸாகரத்தில் விழுந்து, கரை சேர முடியாமல் தத்தளிக்கிறார். இதை யெல்லாம் பார்த்துத்

(251-ம் பக்கம் பார்க்க)

# லைலி

(கு. ராஜாராம்)

மனிதனுக்கு ஆசை என்பது மட்டும் இல்லாமலிருந்தால் உலகில் சண்டையேது, சச்சரவேது? ஒன்றுமே இருக்காது. துயரத்தின் சாயல் தினைத்துணையும் இல்லாமல் பூமி முழுவதுமே இன்பம் நிறைந்த ஒரு சொர்க்க லோகமாகிவிடும். இல்லையா?

ஒரு குதிரையின் மேல் ஆசை கொண்ட ஓர் மன்னன், அதை அடைதற்காக எவ்வளவு பொருள், எத்தனை மனித உயிர்கள் செலவழித்தான் தெரியுமா? ஒரு தனி மனிதன் சவாரி செய்து இன்பமெய்துவதற்காக அறுபது லட்ச ரூபாயும், பன்னீராயிரம் உயிர்களும் விரையமாயின.

புருஷபுர அதிபன் முகம்மதுகானிடம் தான் அந்த விலையுயர்ந்த குதிரை இருந்தது. அதை கான் தன்னுடைய உயிரினும் மேலாகக் கருதி, மிகவும் செல்வமாக வளர்த்து வந்தான். அதனை லைலி என்று பெயரிட்டு அருமையாக அழைத்து வந்தான்.

லைலி, அரண்மனையில் ஆடம்பரமான முறையில் வளர்க்கப் பட்டமையால் நிரம்பவும் அழகாயிருந்தது. அதன் தோற்றத்திலேயே ஒரு தனி கம்பீரம் தோன்றும். அதனுடைய நடைக்கு அதனுடைய நடையைத்தான் ஒப்பிட வேண்டும். அழகுக்கும் ஆண்மைக்கும் ஏற்ப, அறிவும் நிறைந்த குதிரையா யிருந்தது. பல வகையிலும் சிறந்து விளங்கிய அப் பரியைப் பற்றி அறியாதார் அக்காலத்தில் எவருமில்லை என்றே கூறலாம். அதனுடைய ஆண்மை, வனப்பு, சிறந்த குணம் இவைகளைப் பற்றி பஞ்சாப், ஆப்கனிஸ்தானம் முழுவதும் பரவியிருந்தது.

லைலியைப் பற்றிய விஷயத்தை பஞ்சாப் சிங்கமாகிய இரஞ்சித் சிங் அறிந்தான். அவனுக்கு அதன் மீது அளவிலாத ஆசை உண்டாகியது. அந்த ஆசை, அதை அடைய முயற்சிக்கும்படி தூண்டி விட்டது. தான் ஒரு பெரிய சக்கரவர்த்தி என்ற காரணத்தால், கேட்டவுடன் கான் குதிரையைக் கொடுத்து விடுவான் என்று எண்ணினான்.

ஆதலின் ஒரு தூதனை அனுப்பி, லைலியைக் கொடுத்தால் ஏராளமாகப் பணம் தருவதாகக் கூறிக் கேட்கச் செய்தான். தன்னுடைய உயிரினும் பெரிதாகக் கருதி வளர்த்து வந்த அருமை லைலியை, கேவலம் பொருளுக்கு ஆசைப் பட்டுக் கொடுத்து விடுவதா? லைலியை அவனிடமிருந்து பிரிப்பதென்பது முடியாத காரியம். ஆகையால் முகம்மது கான் கொடுக்க மறுத்தான்.

மறுப்பை அறிந்த மன்னவன், நெருப்பைக் கக்கும் மலை போல் சீறினான். "என் வேண்டுதலை மறுக்க அவனுக்கு அவ்வளவு தைரியமா? செய்கிற வழியாய்ச் செய்தால் எல்லாம் தானே வந்து விடுகிறது!...மயிலே, மயிலே இறகு போடு என்றால்

போடுமா?...நாட்டிற்கு உலை வைத்தால் நாய்போல் கொணர்ந்து கொடுக்கிறான்!'' என்று ஏளனமும், கோபமும் கலந்த குரலில் கத்தினான் இரஞ்சித் சிங்.

பின்னர் சிங்கின் சேனை வெள்ளம் புருஷபுரத்தை நோக்கி ஓடியது. முகம்மது கான் தன்னுடைய சிறு படையுடன் எதிர்த்து நின்றான். சிங்கத்தின் மாபெரும் படையை எதிர்த்து வெல்ல கானின் சேனைக்கு சக்தி ஏது? முகம்மது கான் சமரில் தோல்வியுற்றான்.

உடனே ஒரு துக்ககரமான செய்தி பரவியது. லைலி இறந்து விட்டது என்பதுதான் அச்செய்தி. தாங்கள் எதை அடைவதற்காக அவ்வளவு தூரம் வந்தார்களோ, அது எமனுலகு எய்திய பின், சிங்கின் சேனைவீரர்களுக்கு அங்கென்ன வேலை? ஆதலின் அவர்கள் தங்களுடைய தலைநகரான லாகூருக்குத் திரும்பிச் சென்றனர்.

அங்கு சென்ற பின்னர்தான் அச் செய்தி முழுப்பொய் என்று தெரிந்தது. வதந்தியைக் கிளப்பி விட்டு ஏமாற்ற மடையச் செய்த கானின் மேல் கடுங்கோபம் கொண்டான் இரஞ்சித் சிங். ஆசையால் போர் ஆரம்பித்தான். இப்பொழுது அதனுடன் சினமும் சேர்ந்து கொண்டது. கேட்பானேன்?

இரஞ்சித் சிங்கின் இளம் புதல்வன் காரக் சிங்கின் தலைமையின் கீழ், சேனை புருஷபுரத்தை நோக்கிப் பறந்தது. இந்த மிகப் பெரிய படையைக் கண்டு அஞ்சிய கான், பொருது வெல்ல முடியாது என்றுணர்ந்து மலைப் பிரதேசத்தை நோக்கி ஓடி ஒளிந்தான். குதிரை லைலியையும் எங்கோ ஒளித்துக் கொண்டான்.

சிங்கின் வீரர்கள் எட்டு மாதங்கள் வரை அக்குதிரையைத் தேடினார்கள். சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தும் அது அகப்படவில்லை. பிறகு சலித்துப்போய் முயற்சி வீணென்று உணர்ந்து லாகூர் திரும்பினர்.

இப்பொழுதும் காரியம் காயாயிற்று என்பதைக் கேட்ட சிங் சீறினான். குதிரையை அடைய முடியவில்லையே என்று வருந்தினான்.

சீக்கிய வீரர்கள் சென்று விட்டார்கள் என்பதை யறிந்த கான் மலைப் பிரதேசத்திலிருந்து வந்து நாட்டை அடைந்தான். கான் திரும்பவும் தேசத்தை அடைந்த விஷயம் சிங்கத்திற்கு எட்டியது.

மறுபடியும் குதிரைக்காகப் போர் நடந்தது. மிகவும் கடுமையாக நடந்த இந்த யுத்தத்தில் முகம்மது கான் உயிரிழந்தான். எனினும், லைலியைக் காண வில்லை.

முகம்மது க்கானின் இளைய சகோதரன், தான் லைலியைத் தருவதாகக் கூறி நாட்டை அடைந்தான். சிங்காதன மேறியதும், அவன் தம்பி அங்கதனாகி விட்டான் இவனும்.

குதிரையைக் கேட்கும்போது ஏதாவது சாக்குப் போக்குகளை காட்டி வந்தான். அவனுடைய பித்தலாட்டங்க ளெல்லாம் சிங்கத்திடம் பலிக்குமா?

மீண்டும் சேனை சென்றது. கானின் சகோதரன பிடிக்கப் பட்டு, சிறையில் அடைக்கப் பட்டான். இவ்வளவு செய்த பின்னரும் லைலி அகப்படாம லிருக்குமா?

லைலி கிடைத்தது. பஞ்சாப் சிங்கத்தின் அரண்மனையை அடைந்த பின் விலையுயர்ந்த ஆடைகளும், ஆபரணங்களும் அதை அலங்கரித்தன. மன்னவன் மனம் மகிழ்ச்சி அடைந்தது. அதன்மீது ஏறிச் சவாரி செய்து தன்னுடைய ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டான்.

கானின் சேனை சிறிதாயிருந்தாலும் தீவிரமாகப் போரிட்டனவாதலால் அநேகர் இறந்தனர். ஆம்! ஆசைப் பேய்க்கு 12,000 ஆட்கள் பலியாயினர். 60 லட்ச ரூபாய் செலவழிக்கப் பட்டது. ஒரு தனி மனிதனின் பொல்லாத ஆசை நிறைவேறியது......

என்ன ஆசை! என்ன உலகம்! அட பாழும் மனிதா!

---

(248-ம் பக்கத் தொடர்ச்சி)

தான் மொரேவியா நாட்டில் ஒரு பழமொழி உலவுகிறது: "பொது ஜனங்கள் கை தட்டும்போது, பிரசங்கிக்கு உற்சாகம் பிறந்து விடுகிறது. வீட்டுக்கு வந்தவுடன், ரொட்டியில் உப்பில்லா விட்டாலும் கூடக் கவனிப்பதில்லை. மனைவியிடம் கூடப் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விடுகிறார்."

இதுமாதிரி, உண்மையிலேயே நடந்தால் மனைவிக்கு எவ்வளவு மகிழ்ச்சி உண்டாகும்? முன்னெல்லாம் "தினம் பாட்டும் லெக்ஸர்தானா?" என்று கேட்பவள் "இன்றைக்கு, லெக்ஸர் ஒன்றும் இல்லையா!" என்று கேட்கமாட்டாளா?

இதை யெல்லாம் வைத்துக்கொண்டு பார்த்தால், தூக்கி வைத்துப் பேசுதல், உலகிலே எவ்வளவுதூரம் தனது ஆட்சியைப் பலப்படுத்தி யிருக்கிறது என்று தெரியும். உலகத்திலுள்ள எல்லா மனிதனும் தன்னைப் பிறர் மெச்சவேண்டும்; யதார்த்தமாகவே பேசினாலுஞ் சரி. தூக்கிப் பேசினாலும் சரி என்றே விரும்புகிறான். தூக்கி வைத்துப் பேசுதல் ஒரு கலை. அதில் 'பாஸ் சர்டிபிகேட்' வாங்குவது கடினம். சமயா சந்தர்ப்பம் தெரியாமல் உபயோகித்தால், நாம் உபயோகிக்கும் தூக்கு மொழிகள், நம்மையே தூக்கி வாரிப்போட வழி வைத்தாலும் வைத்து விடும். ஜாக்கிரதை.

# ஓர் அற்புத சிருஷ்டி

(ர. ப. மு. கனி)

"மா தாக்கோயிலின் உள்பக்கத்தை நான் பார்த்திருக்கிறேன். கெட்ட சேர்க்கை என்னைப் பாழாக்கி விட்டது. பார்டொலொ∴ப், ஒரு தெம்மாங்கு பாடு. என்னைக் குஷிப் படுத்து. நான் சன்மார்க்க நெறியை விட்டு விலகாமல் ஒரு பிரபு இருக்க வேண்டிய முறையிலேயே இருக்கிறேன். சத்தியஞ் செய்ததில்லை; வாரத்தில் ஏழு தடவைக்கு மேல் சூதாடியதில்லை; வேசி வீட்டிற்கு கால் மணிக்கு ஒரு தடவைக்கு மேல் போனதில்லை; கடன் வாங்கிய பணத்தை—நாலைந்து தடவை—திருப்பிக் கொடுத்திருக்கிறேன்; நல்ல நிலையில் இருந்தேன். நன்ருக வாழ்ந்தேன். இப்போ..." இப்படித் தன்னைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்கிருன் ஸர் ஜான் ∴பால்ஸ்டா∴ப்.

மதுக்கடையில் அவன் தூங்கிக்கொண் டிருக்கும்போது அவனுடைய நண்பர்கள் அவன் சட்டைப் பையில் இருந்த ஒரு பித்தளை மோதிரத்தையும் ஒரு தாளையும் திருடி விடுகின்றனர். அதைப்பற்றி விசாரிக்கும்படி கடைக்காரியிடம் சொல்கிருன். அவள் தன் கடையில் திருடர்கள் கிடையாது என்று சொல்லி விடுகிருள். ஸர். ஜானுக்குக் கோபம் மூக்கை முட்டுகிறது. 'நாற்பது மார்க்குகள் பெறுமானமுள்ள தன் மோதிரம் களவுபோய் விட்டதே' என்கிருன்.

கடைக்காரி:—அட கடவுளே! இளவரசர் அந்த மோதிரம் பித்தளை என்று சொன்னரே.

ஸர் ஜான்:—அப்படியா! இளவரசன் ஒரு முட்டாள். அவன் அந்த மாதிரிச் சொன்னுல் அவனைத் தடிக்கம்பால் நாயை அடிப்பது போல் அடிப்பேன்.

அப்போது இளவரசன் வந்து விடுகிருன்.

ஸ. ஜா:—நேற்று ராத்திரி, நான் இங்கே படுத்து உறங்கி விட்டேன். யாரோ சேப்படி (Pickpocket) அடித்து விட்டாங்க. இந்தக் கடையே கெட்டுப் போச்சு. எல்லாப் பயலும் திருடங்களாகப் போய் விட்டாங்க.

இள:—உனக்கு எவ்வளவு நஷ்டம்?

ஸ. ஜா:—ஹால், நீ என்னை நம்புவாயா? நாற்பது பவுனுக்கு நோட்டு, என் பாட்டனர் முத்திரையுள்ள மோதிரம்......

இள:—இவ்வளவு தானு? (விட்டுத் தள்ளு) எட்டு பென்ஸ் யாபாரம்.

∴பால்ஸ்டா∴புக்குக் கோபம் வந்து விடுகிறது. அவன் தன் கோபத்தைக் கடைக்காரிமேல் காட்டுகிருன்.

அவள் ஸர் ஜான் தனக்கு இளவரசன் ஆயிரம் பவுன் தர வேண்டுமென்று சொன்னன் என்று இளவரசனிடம் சொல்கிருள்.

இள:—ஏண்டா, நான் உனக்கு ஆயிரம் பவுன் தரவா வேண்டும்?

ஸ. ஜா:—ஆயிரமா? ஹால், கோடி! உன் அன்பு ஆயிரமா பெறும்? உன் அன்பைத்தான் நீ எனக்குத் தர வேண்டும்.

பின்னர் இளவரசனை அவன் தடியால் அடிப்பேன் என்று சொன்னது உண்மையா என்று கேட்கிறான்.

ஸ. ஜா:—ஹால், நீ மனிதனாய் இருந்தால் அப்படித்தான். நீ இளவரசன். ஆகவே, சிங்கக்குட்டியின் கர்ஜனைக்குப் பயப் படுவது போல உனக்கும் பயப்படுகிறேன்.

இள:—ஏன் சிங்க மில்லை?

ஸ. ஜா:—அரசருக்குச் சிங்கத்திற்குப் பயப்படுவதுபோல் பயப்பட வேண்டும். உனக்கு நான் அவ்வளவு பயப்படுகிறேனா?

இவ்விதம் ஸர் ஜான் தப்பிப்பதற்கு சமயோஜிதமாக எதை யாவது பேசி விடுகிறான்.

இங்கிலாந்திலே அரசருக்கு எதிராகச் சில கலகக்காரர்கள் கிளம்புகின்றனர். பெரும்போர் மூள்கிறது. அதில் இளவரசன் மிகுந்த வீரத்தோடு போர் புரிகிறான். நம் வீரன் ஸர் ஜானும் போர்க்களத்தில் (வாள்வீச வேண்டிய இடத்திலும் வாய் வீச்சு வீசிக்கொண்டு) தைரியத்தைக் கையில் பிடித்துக் கொண் டிருக்கிறான்.

ஹாட்ஸ்பர் என்ற கலகத் தலைவன் பெரும் வீரன். அவ னோடு இளவரசன் போர் புரியும்போது ஸர் ஜானோடு ஒரு (கலகக் கார) வீரன் சண்டை செய்கிறான். அவனை வெல்ல முடியாது என்று கண்ட ஸர் ஜான் அவன் கொல்லு முன்பே செத்தது போல் தரையில் விழுந்து (பொய்யாக) இறந்து விடுகிறான். வீரன் ஹாட்ஸ்பரை இளவரசன் முடித்து விடுகிறான். பின் தன் நண் பன், ஸர் ஜான் இறந்து கிடப்பதைக் கண்டதும் அவனுக்கு வருத்தமாக இருக்கிறது. அவனை நல்ல முறையில் அடக்கஞ் செய்யச் சொல்ல வேண்டும் என்று சொல்லிக் கொண்டே அவன் போய் விடுகிறான். பிறகு ஸர் ஜான் மெதுவாக எழுந்திருக்கிறான். ‘இந்தமாதிரி பாசாங்கு செய்திருக்கா விட்டால், அந்த முரட்டு ஸ்காட் என்னைக் கொன்றே இருப்பான்’ என்று சொல்லிக் கொண்டே குத்துண்டு இறந்து கிடக்கும் ஹாட்ஸ்பரைப் பார்க்கி றான். ‘அவனும் ஏன் நம்மைப்போல் பாசாங்கு செய்யக் கூடாது? ஆகவே அதை நிச்சயம் செய்து கொள்கிறேன். நான் கொன்ற தாகவே சத்தியம் செய்வேன். யாரும் என்னைப் பார்க்க வில்லை. அதனால் (இறைந்து) அடே, (அவனைக் குத்துகிறான்) இதோ, உன் துடையில் ஒரு புதுக்காயம். வா என்னோடு’ என்று சொல்லி ஹாட்ஸ்பர் சவத்தைத் தன் முதுகில் தூக்கிச் செல்கிறான். இளவரசன் அவனைப் பார்க்கிறான். அவனுக்கு ஆச்சரியமாய் விடுகிறது.

ஸ. ஜா:—நான் இரட்டை மனிதனில்லை. இது நிச்சயம். நான் ஜேக் ∴பால்ஸ்டா∴ப் இல்லையென்றால் நான் ஒரு மடையன். இந்தா, (தன் முதுகில் இருந்த சவத்தைத் தரையில் போடுகிறான்) உன் தகப்பனார் எனக்கு ஏதாவது சன்மானம் செய்வதாய் இருந்தால் செய்யட்டும், இல்லையானால் அடுத்த ஹாட்ஸ்பரை அவரே கொன்று கொள்ளட்டும்.

இள:—ஏன், நானல்லவா அவனைக் கொன்றேன்? நீயும் இறந்து கிடக்கக் கண்டேனே?

ஸ. ஜா:—பார்த்தாயா. கடவுளே, கடவுளே, இந்த உலகத்தில் பொய் தான் எப்படியெல்லாம் உருவெடுக்கிறது! நீ சொன்னதுபோல் நான் தரையில் இறந்து கிடந்தேன். அவனும் கிடந்தான். ஆனால் நான் எழுந்தேன். அவனும் அதே சமயத்தில் எழுந்தான். இருவரும் நெடுநேரம் சண்டை போட்டோம். என்னை நம்பக்கூடுமானால் நம்பட்டும். சத்தியமாய் இந்தக் குத்து நான் தான் அவன் துடையில் குத்தினேன். அந்த மனிதன் உயிரோடிருந்து இதை மறுத்தால், அவனை என் வாளின் ஒரு துண்டை ருசி பார்க்கும்படி செய்வேன்.

போர்க்களத்திலும் தன் பொய் சொல்லும் திறமையால் தன் கோழைத்தனத்தை இவ்விதம் மறைக்கப் பார்க்கிறான் ∴பால்ஸ்டா∴ப்.

சி∴ப் ஜஸ்டிஸ் என்ற நியாயம் வழங்கும் உத்தியோகஸ்தன் தன் சேவகனுடன் ஸர் ஜானை எச்சரிக்கை செய்ய வருகிறான். (இரண்டாம் பாகம்) சேவகன் ஸர் ஜானைக் கூப்பிடுகிறான். ஸர் ஜானுக்கு அவன் எதற்குத் தன்னைக் கூப்பிடுகிறான் என்பது தெரியும். ஆகவே தன்னுடைய பணியாளி (Page) டம் தனக்குக் காது கேளாது என்று அவனிடம் சொல்லும்படி சொல்கிறான். பிறகு,

சேவகன்:—ஸர் ஜான்,—

ஸ. ஜா:—என்ன! வாலிபப்பயல், பிச்சை எடுக்கிறாயா? ஏண்டா, யுத்தமில்லையா? உனக்கு வேலை இல்லை? ராஜாவுக்குப் பஞ்சமா வந்துவிட்டது? கலகக்காரங்களுக்குமா 'சோல்ஜர்கள்' தேவை இல்லை? மோசமான கட்சியில் சேர்ந்திருப்பதை விடப் பிச்சை எடுப்பது கேவலம்......இவ்விதமாகச் சேவகனைப் பிச்சை கேட்கிறாயா என்று திட்டுகிறான். பிறகு உத்தியோகஸ்தன் கண்டிக்கத் தொடங்கியதும் அவனைத் தழப்புகிறான்.

ஸர் ஜான் மதுக்கடைக்காரிக்குக் கொடுக்கவேண்டிய பாக்கியையும் கொடாமல் அவளையும் கைவிட்டு விட்டதால் அவள் அவன்மேல் 'வாரண்டு' போட்டு, சேவகனோடு அவனைத் தேடி வருகிறாள். தெருவில் தன் சகாவோடு நின்ற அவனைப் பார்க்கிறாள். அவளையும் சேவகனையும் கண்ட ஸர் ஜான், "என்ன விஷயம்? யார் குதிரை செத்துப்போச்சு?" என்கிறான்.

சேவகன் அவனை 'அரஸ்டு' செய்வதாகச் சொல்கிறான். வாய் வீரன் ஸர் ஜான் தன் வாயை நன்றாக உபயோகிக்கிறான்.

ஸ. ஜா:—ராஸ்கல் போடா! (தன் சகாவைப் பார்த்து) பார்டொலொ.ஃப், உன் வாளை எடு. இந்தப் பயல் தலையைக் கொண்டா. அந்தத் துஷ்டையை வாய்க்காலில் தூக்கிப் போடு.

இவ்விதம் பயங்காட்டியதும் அந்தப் பெண் நடுங்கி விடுகிறாள். 'உதவி, உதவி' என்று கத்துகிறாள். நியாய உத்தியோகஸ்தன் வருகிறான். அவனிடம் ஒருவிதமாகச் சமாதானம் சொல்லிவிட்டு, மதுக்கடைக்காரியையும் சரிப்படுத்தி அனுப்பி விடுகிறான். இதில் தான் அவன் சாமர்த்தியம்.

ஸர் ஜான், ஜஸ்டிஸ் ஷேலோ (Shallow) என்ற கிராம நீதிபதியோடு நண்பனாகிறான். அவனோடு அளவளாவி வருகிறான். அப்போது நாலாம் ஹென்றி மன்னர் இறந்து விடுகிறார். அவர் மகனும் ஸர் ஜானின் நண்பனுமான ஹென்றி இளவரசன் ஐந்தாம் ஹென்றி மன்னன் என்ற பெயரோடு அரசனாகிறான். தன் நண்பன் அரசனாகி விட்டான், இனி தன் பாடு யோகந்தான் என்று நினைக்கிறான் ஸர் ஜான். அவன் சகாக்களும் அவன் இனி அந்நாட்டிலேயே மகா பெரிய மனிதன் என்று சொல்கின்றனர். அவன் தன் நண்பனான அரசனைப் பார்ப்பதற்காகத் தன் சகாக்களோடு செல்கிறான். ஒரு பொது இடத்தில் அரசன் பரிவாரஞ் சூழ வருகிறான். இப்போதும் ஸர் ஜான் அரசனைப் பழைய முறையிலேயே அழைத்துப் பேச ஆரம்பிக்கிறான்.

ஸ. ஜா:—ஹால் அரசனே, கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும். என் ஹால் அரசனே!......என் அருமைப் பையா, உன்னைத் தெய்வம் பாதுகாக்கட்டும்.

அரசன் ஸர் ஜானைத் தனக்குத் தெரியாது என்றே சொல்லி விடுகிறான். மேலும் இவ்வளவு நாளாக அவர்களுடன் நடத்திய மோசமான வாழ்க்கையை நினைத்துப் பார்க்கிறான். இனியும் அவர்களோடு முன்போல் அவனால் பழக முடியாது. ஆகவே அவன் இருப்பிடத்திலிருந்து பத்து மைல் சுற்றளவுக்குள் அவர்கள் வரக்கூடாது, வந்தால் உயிரை இழக்க வேண்டும் என்று உத்தர விடுகிறான். அதை ஸர் ஜான் வெளிக்குச் சொன்ன மொழிகளாகவே நினைக்கிறான். ஆகவே, அவன் தன் சகாக்களிடம் சொல்கிறான், "பாருங்கள், வெளி உலகத்திற்கு இப்படித் தெரியவேண்டும் அவன் (அதற்காகத்தான் இங்கே இந்த உத்தரவு போட்டிருக்கிறான்) தனியாக அவன் என்னைக் கூப்பிடுவான்......இன்று இரவே என்னை அழைப்பான்" என்று.

பாவம்! அவனும் அவன் சகாக்களும் தங்கள் நடத்தையிலும் பேச்சிலும திருந்தவேண்டும் என்பதற்குத்தான் இந்த பிரஷ்டம் என்பதை அவன் உணரவில்லை.

'ஐந்தாம் ஹென்றி மன்னன்' என்ற நாடகத்தில் ஸர் ஜான் ஃபால்ஸ்டா.ஃப் இறந்து போனதை நாம் அவன் சகாக்களுடைய

பேச்சிலிருந்து அறிகிறோம். அரசனுடைய உத்தரவு உண்மை தான் என்பதை அறிந்ததும் அவன் மனம் உடைந்து விடுகிறது. அவன் இறக்கும்போது, "கடவுளே, கடவுளே, கடவுளே," என்று நாலைந்து தடவை கத்தினனும். உடனே உயிர் போய் விட்டதாம். அதற்கு முன், 'கள்ளு. கள்ளு" என்று கேட்டானும். பெண்களைப் பற்றியும் அவன் பேசினனும். (அதை நாம் தெய்வ வாக்காக எடுத்துக் கொள்ளக்கூடாது). அதாவது 'பெண்கள் மனித உருவி லுள்ள பேய்கள்' என்று.

ஸர் ஜான் ஃபால்ஸ்டாஃப். ஓர் அறபுத சிருஷ்டி. அவன் வாழ்க்கை மிக்க விநோதமானது. "பொய், பொய், பொய்," "கள், கள், கள்" இவைதான் அவன் வாழ்க்கையில் நாம் முக்கியமாகக் காண்பவை. ஆனல் அவனுடைய ஒவ்வொரு சொல்லும் நமக்கு அளவிலாப் பெருமகிழ்ச்சியைக் கொடுக்கின்றன. அவனைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் அவனைச் சிருஷ்டித்த ஷேக்ஸ்பியரைப் புகழாமல் இருக்க முடியவில்லை.

குறிப்பு:—இக் கட்டுரையில் உள்ள கூற்றுக்கள் என்னுடை யவை. எந்த 'கிரிடிக்'கையும் படிக்காமல் எழுதப்பட்டவை. தவிர வும் மொழிபெயர்ப்புக்கள் நகைச்சுவையின் பெருமையைக் காட்டு வதற்காகச் சில இடங்களில் நேருக்கு நேராக இல்லாமல் தழுவ லாகவே இருக்கலாம். இவற்றைப் பொருட்படுத்த வேண்டா மென்று கேட்டுக்கொள்கிறேன்—கனி.

---

# பழைய மாடலனும் புதிய மாடலனும்

(வித்வான்-வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் P. O. L.)

மாடல் என்ற பெயர் புதியதாக இருக்கின்றதே என்று வாசகர்கள் நினைக்கவேண்டாம். இப் பெயரை யுடைய ஒரு அந்தணன் கோவலனுக்கு நண்பனாக இருந்தான். அவன் கோவலனுடைய ஊராகிய காவிரிப்பூம் பட்டினத்துக்குச் சமீபத்தே யிருந்த திருச்செங்காளம் என்ற ஊரிலிருந்தவன். நான்கு வேதங்களையும் நன்கு பயின்றவன். பிறருக்கு நன்மையே செய்யும் இயல்பினன். பல மறைவலாளர்களுக்குத் தலைவனுவான். இவன் ஒரு சமயம் தீர்த்த யாத்திரை செய்வதன் பொருட்டுத் தன்னூரினின்றும் புறப்பட்டான். குமரித் தீர்த்தமாட செல்வானுயினன். அங்ஙனம் செல்பவன் இடைவழியிலே இருக்கும் அகத்திய முனிவருடைய பொதிய மலையைக் கண்டான். வணங்கினன், வாழ்த்தினன்: அங்கிருந்தும் குமரிக்குச் சென்று தீர்த்தமாட வேண்டிய முறையில் மூழ்கினன். மூழ்கித் தன்னூருக்குத் திரும்பினன். வருகையில் மதுரையை அடைந்தனன். முனிவர்கள் தங்குவதற்கென நகருக்கு வெளியே அமைக்கப் பெற்றிருக்கும் புறஞ்சேரியில் தங்கினன். ஊழ்வினை வந்துறுத்தியதனல் மாதவியை விட்டு நீங்கிய கோவலனும் இழந்த பொருளைச் சம்பாதிக்கக் கண்ணகியோடு புறப்பட்டு இடைவழியிலே சந்தித்த சைன துறவியாகிய கவுந்தியடிகளையும் உடன் கொண்டு மதுரையை யடைந்து புறஞ்சேரியிலே தங்கி யிருந்தான். தங்கியிருந்த கோவலன் மாடலனது வருகையைக் கண்டான். எதிர்சென்று அவனுடைய கால்களில் விழ்ந்து வணங்கினன். வணங்கியவனை நோக்கி "கோவலா! யானறிந்த வளவில் நீ செய்த அனைத்தும் நல்வினையாக விருக்க, இங்ஙனம் தீமையுறுவானேன். அது பழய வினைப்பயனே? அதிலும் திருத்தகு மாமுனிக் கொழுந்தாகிய கண்ணகியுடன் போந்த தீவினை யாதோ?" என்று கூறினன். கோவலன் மாடலனை நோக்கித் தான் கண்ட கனவைக் கூறி யாது நீங்கு வருமோ? என வினவினன். மாடலமறையோன் அதற்குரிய விடை கூறுது, கோவலனை நோக்கி, "நீ இந்த அறவோர் தங்குமிடத்தே இருத்தல் கூடாது. மதுரை நகரை அடைவாய்" என்று கூறினன். கோவலன் கேட்ட வினவிற்கு விடை கூறுது நாவலனுகிய மாடலன் மதுரையை அடைவாய் என்று கூறிய காரணம் புலப்படவில்லை. வினை நாவலனையும் நாவடக்கியது என்றுதான் கொள்ளக் கிடக்கின்றதே யொழிய வேறில்லை.

*    *    *    *

மேலும், கண்ணகியின் செய்தி கேட்ட சேரன் அவளுக்குக் கோயில் கட்ட வேண்டுமென்று விரும்பினன். அவளுடைய வடிவம் எழுதி அமைக்கக் கல் வேண்டுமென்றே? கல் கொண்டு வர இமயம் சென்றுன். அங்கு எதிர்த்த அரசர்களையும் வென்று இமயத்திலிருந்து கல் கொணர்ந்து கங்கையில் நீராட்டினன். கங்கையின் தென்கரையில் ஆரிய மன்னர் அமைத்த பாடி வீட்டில்

தங்கினன். அப்போது அங்கே மாடலனும் தோன்றினன்; அரசனைக் கண்டு வணங்கினன்; "வாழ்க எங்கோ! மாதவி மடந்தை பாடிய கானற்பாணி கனக விசயர்தம் முடித்தலை நெரித்தது." என்றான் என்பது,

"வாழ்க எங்கோ மாதவி மடந்தை.
கானற் பாணிகன கவிசயர்தம்
முடித்தலை நெரித்தது."

(நீர்படை காதை 49. 51) தெரிகின்றது.

இங்ஙனம் கூறிய மாடலனைச் செங்குட்டுவன், "நான்மறையாளா! நீ கூறியதன் உரை பொருள் யாது? மாற்றரசர் பலரும் அறியாத ஒன்றினைக் கூறி யிருக்கின்றனை? அதனைக் கூறுக" என்றான். மாடலன், "குட்வர் கோவே! கோவலன் கண்ணகி செய்தி கேட்ட மாதரி தீயிற் புகுந்திறந்தாள். கவுந்தியடிகள் உண்ணா நோன்பு கொண்டு உயிர் துறந்தார். மாசாத்துவன் பௌத்தப் பள்ளி யடைந்தான். அவனுடைய மனைவி உயிர் துறந்தாள். கண்ணகியின் தந்தையும் துறந்து ஆசீவகப்பள்ளி புகுந்தான். அவனுடைய மனைவியும் இறந்தாள். மாதவியும் அவள் மகள் மணிமேகலையும், உலகத்தையே வெறுத்து பௌத்த பள்ளியை அடைந்தார்கள். (எனவே கோவலனைச் சேர்ந்த அனைவரும் பௌத்தப் பள்ளியை யடைந்தார்கள். கண்ணகியின் தந்தை மட்டும் சமணப்பள்ளியை அடைந்தான்) என்று கூறினன். மேலும், "அரசே! இவ்வளவு சம்பவங்களும் நிகழ்வதற்கு, யானே காரணன். யான் காவிரிப்பூம் பட்டினம் சென்றேன். கோவலனும் கண்ணகியும் மரித்த செய்தியை என்னால் கேட்ட சிலர் அவர்களுடைய பெற்றோர்க்கும் மற்றையோர்க்கும் தெரிவித்தார் போலும். அதனால் அவர்களுள் சிலர் இறந்தார்கள். அந்தப் பாவத்தைப் போக்கிக்கொள்ள கங்கை நீராட இங்குப் போந்தேன். போந்த தன் பயனாகத் தங்களைக் கண்டேன்" என்றான். இது போன்ற சில செய்திகளைக் கூறிவிட்டுச் செங்குட்டுவன் பரிசிலாகக் கொடுத்த ஐம்பது துலாம் பொன்னைப் பெற்றுக்கொண்டு தன்னூருக்கு மீண்டான்.

* * * *

கங்கைப் பாடியிலிருந்து செங்குட்டுவன் வஞ்சி யடைந்து பல சிறப்புக்களுடன் நாளோலொக்க மண்டபத்தில் அமர்ந்திருந்தான். மாடலனும் அங்குப் போந்து அரசவை யடைந்தான். அதுபோது நீலன் முதலியோர் செங்குட்டுவனுடைய அவைக்களத்தை யடைந்து சோழ பாண்டியர்கள், செங்குட்டுவனை இகழ்ந்ததாகக் கூறினார்கள். கேட்ட செங்குட்டுவன் தன் தாமரைச் செங்கண் தழல் நிறங் கொண்டான். அருகிருந்த மாடலன் எழுந்து "மன்னர் மன்ன! வாழ்க நின் கொற்றம்! தணிக நின் கோபம்! பெருக நின் வாழ் நாட்கள் பொருனை யாற்று மணலினும் பல. நினக்கு இப்போது வயது 50 ஆயிற்று. இன்னும் மறக்கள வேள்வியே

செய்ய முயலுகின்றாய். நின்னினும் அருஞ்செயல் செய்து உலக காண்ட நின் முன்னோர்கள் எல்லோரும் இறந்து பட்டனரே யொழிய உயிருடனிருந்தார் ஒருவருமில்லை. எனவே, யாக்கை நிலையாமையை எளிதில் உணரலாம். நீயே நின் யாக்கை முதிர்ந்து நரைத்திருப்பதைக் காண்கின்றனை. எனவே இளமையும் நிலையற்றது என்பது நான் கூறவேண்டியதில்லை" என்று யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை முதலியன கூறினான். மேலும், தெய்வ வடிவம் பெற்ற ஒரு ஆன்மா மீண்டும் மண்ணில் வாழும் உயிர்களின் உருவினை யடையவுங் கூடும். அங்ஙனமே மனித யாக்கையைப் பெற்ற ஒரு உயிர் விலங்குக் கதி எய்தினும், எய்தும். விலங்கு நரருடைய கதியினையும் அடையும். நாடக மேடையில் நடிப்பவர், பல வேறு கோலங் கொண்டு நடிப்பது போன்று, ஆன்மாவும் செய்த ஊழ்வினைக் கேற்றவாறு வேறு வேறு கோலத்தோடு உலகில் நடிக்கின்றது. எனவே, புண்ணியச் செயல்களைச் செய்து புண்ணிய உலகத்தை அடைதலே மக்கள் யாக்கையின் பயனாகும். அப் புண்ணியப் பேற்றினைப் பெறுவதற்கு வேதவிதிப்படி வேள்விகளைச் செய்வாயாக" என்று மொழிந்தான். அது கேட்ட செங்குட்டுவனும் வேள்வி செய்வானாயினன் என்பது நடுகல் காதைத் தொடர்களால் அறியக் கிடக்கும் செய்தி யாகும்.

மீண்டும் மற்றொரு முறை, கண்ணகியைக் கண்டு வணங்க வந்த (கண்ணகிக்கு உயிர்த் தோழியாக விருந்த) தேவந்தியின் வரலாற்றினைச் செங்குட்டுவனுக்குக் கூறிச் சென்றான் என்பது வரந்தரு காதையால் தெரிகின்றது. இதுகாறும் கூறப்பெற்ற மாடலன் சிலப்பதிகார ஆசிரியர் என்று கூறும் இளங்கோவடிகளால் கற்பிக்கப்பட்ட மாடலனாவான்.

* * * *

இனிக் கோவலன், கண்ணகி, கவுந்தி ஆகிய மூவரும் உறையூரை விட்டுப் புறப்பட்டு தென்திசை நோக்கிச் சென்று மாலை காலத்தே வளவயலும் வாவியும் பொலிந்த ஒரு சோலையுள் புகுந்து தங்குவாராயினர். அதுபோது அந்தணன் ஒருவன் பாண்டிய அரசனை வாழ்த்திக் கொண்டு அங்கு வந்தான். அவனைப் பார்த்து, "ஐயா! யாது நம்மூர், வந்த காரணம் யாதோ?" என்று கோவலன் வினவினான். மாமறையாளன், "யான் குடமலைப் பக்கத்தே யுள்ள (குடகு நாடு) மாங்காடென்னும் ஊரைச் சேர்ந்தவன். திருவரங்கத் திருமால் கிடந்த வண்ணத்தையும் திருவேங்கடத்தில் திருமால் நின்ற வண்ணத்தையும் கண்டு களித்து வந்தேன்" என்றான் என்பது.

"வளநீர்ப் பண்ணையும் வாவியும் பொலிந்த
விளமரக் கானத் திருக்கை புக்குழி"

(காடுகாண் 13—14)

"தீதுதீர் சிறப்பின் தென்னனை வாழ்த்தி
மாமுது மறையோன் வந்திருந் தோனை
யாது நம்மூர் ஈங்கென் வரவெனக்
கோவலன் கேட்ப" (காடு 30—33)

"மாமறை யாளன்..........................
வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்"

(காடு வரி 53)

என்ற தொடர்களால் கூறப் பெற்றிருக்கின்றன.

இது வரையிலும், இந்த மறையாளன் பெயர் உரையாசிரியர்களாகிய அரும்பத உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் ஏனைய ஆராய்ச்சி யாளர்களும் உரைக்க முடியாமல் விடுத்து விட்டார்கள். அச் செய்தியைத் திரு. துரைசாமிப் பிள்ளை யவர்கள் தம்முடைய பேரறிவைச் செலுத்தித் துருவிக் கண்டு பிடித்து மறையவனுடைய பெயர் மாடலன் என்பதாகத் தமது ஆராய்ச்சி நூல் பக்கம் 71ல் "மாடல் போந்து கோவலற்கு மதுரைக்குரிய நெறி கூறுவான்" என்றும், பக்கம் 81 வரி 9ல் இங்கே (சீரங்கம்) திருமால் எழுந்தருளி யிருக்கும் கோலத்தை மாடலன் கூற்றாக அடிகள் "என்றும் மேற்படி 81ம் பக்கம் வரி 20ல் காண்டற்கு விரும்பிச் செல்வதாக மாடலன் கூறக் கேட்ட இக் கவுந்தி யடிகள்" என்ற வரிகளாலும் கூறுகின்றார். அது பெரிதும் பாராட்டத் தக்கதே.

எனவே, சிலப்பதிகாரத்தில் அடைக்கலக் காதை, நீர்படைக் காதை, வரந்தரு காதை முதலிய மூன்று காதைகளில் இளங்கோ வடிகளால் கூறப் பெற்ற மாடல மறையவன் ஒருவனும், திரு. ஔவை. துரைசாமிப் பிள்ளை அவர்கள் கூறியிருக்கின்ற மாடல மறையவனும் ஆகிய இரண்டு மாடலன்கள் தோற்றுவிக்கப் பட்டிருக்கிறார்கள். இவர்களுள் திருச்செங்காட்டு மாடலன் இளங்கோ வடிகளால் தோற்றுவிக்கப் பட்டவன்: இத் திருச்செங்காடு காவிரிப்பூம் பட்டினத்துக்கு அருகிலுள்ளது. மாங்காட்டு மாடலன் திரு. பிள்ளை அவர்களால் தோற்றுவிக்கப் பெற்றவரா? மாங்காடு குடகு நாட்டிலுள்ளது. குடகு நாடு மதுரைக்குச் சமீபமாக வுள்ளது. இதனாலே செங்காட்டு மாடலனும் மாங்காட்டு மாடலனும் வெவ்வேறு ஆட்களாகும் என்பது கூறாமலேயே விளங்குகின்றது. மேலும் செங்காட்டு மாடலன் கோவலனுடைய நண்பனாக ஆசிரியர் அடிகள் கூறுகின்றார். மாங்காட்டு மாடலன் கோவலனுக்குப் புதியவனாக காணப்படுகின்றான். எனவே, இருவரும் ஒருவராகார். ஆதலால் திரு. ஔவை. துரைசாமிப் பிள்ளை அவர்கள் மாங்காட்டு மாடலனை எவ்வாறு பெற்றார் என்று ஆதாரத்தோடு காட்டி யிருந்தால் என்போன்றார்க்கு நலமாக விருக்கும். தமிழுலகும் பெரிதும் போற்றிப் பாராட்டும்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)

★

## யுரேனஸ் (URANUS)

**ப**தினெட்டாம் நூற்றுண்டின் இறுதியில் புதிதாய்க் கண்டு பிடிக்கப்பட்ட நூதனக் கோள் இது வாகும். இதை **'ஊரன்'** என்றும், **'நிருதி'** என்றும் வழங்குவர். இதன் முக்கியம் கிழக்கிலும்-மேற்கிலும் எல்லோருடைய் கவனத்தையும் வெகுவாக இழுத்திருக்கின்றது.

**கண்டவர் யார்?**—முதன்முதலாக இதைக் கண்டவர் **ஸர்-வில்லியம் ஷெர்ஷல்** (William Herschel) என்னும் ஒரு மேலைப் புலவராவர். இவர் தமது வீட்டைச் சார்ந்த தோட்டப் பகுதியில் வானத்தை ஆராய்ந்து பார்ப்பதற்குரிய சாதனங்களை ஏற்படுத்தியிருந்தார். அந்த சாதனங்களுள் சிறியவொரு தூர திருஷ்டிக் கண்ணுடி ஒன்று. அது அவராலேயே செய்யப்பட்டதாகும். அதன் மூலம் தான் அவர் தினம் வானத்தில் நிகழும் ஒளி விசித்திரங்களைக் கவனித்து வருவது. ஒருநாள் அந்தக் கருவியின் மூலம் வானத்தில் காணக்கூடிய எல்லையுள் பெரியவொரு கோளம் பிரவேசித்துக் கொண்டிருந்ததைக் கண்டார். காணவே அதனை 'வீழ் கொள்ளி' (Comet) இனங்களில் ஒன்ருகக் கருதினுர். அந்த நாள்தான் 1781-ம் ஸு மார்ச்மீ 13உ செவ்வாய்க்கிழமை இரவு மணி 11 என்று பதிவு செய்யப்பட்டிருக்கிறது. அதிலிருந்து பல பொழுது அந்தக் கோளின் இயக்கத்தைத் தொடர்ச்சியாகக் கவனித்து வந்தார். ஒரு வருடத்திற்குப் பிறகு அது 'வீழ்கொள்ளி' இனத்தைச் சேர்ந்த தல்லவென்று உணர்ந்தார். அது ஒரு நூதனக் கோள் என்னும் நிச்சயத்திற்கு வந்தார். எனவே, அதற்கு அப்பொழுதிருந்த அரசருடைய பெயரையே 'ஜியார்ஜியன் ஸைடஸ்—ஜியார்ஜியன் ஸ்டார்' **(Georgian Sidus Georgian Star)** என்று தந்தார். இந்த நூதனக் கோளைக் கண்டுபிடித்த இப் புலவருடைய ஆராய்ச்சியை அந்த மூன்ருவது ஜ்யார்ஜ் அரசர் வெகுவாகப் பாராட்டி, அவருக்கு 'நைட்ஹுட்' **(Knighthood)** என்னும் கௌரவப் பட்டத்தை அளித்தார்.

**யாண்டுளது?** நிருதி மண்டலமென்று கருதப்படும் 'யுரேனஸ்' என்னும் இந்த நூதனக் கிரகம் பூமிக்கு வெளியே சனியின் சுற்று வீதிக்கு அப்பால் தனது வீதியைக் கொண்டிருக்கிறது. 1789-ம் வருஷம் வரை இது சூர்யனைச் சுற்றி வருகிறதென்று நிச்சயிக்கக் கூடாம லிருந்தது. அதன் பின்புதான் சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் கோள்களுள் ஒன்ருகச் சேர்த்துக்கொள்ளப் பட்டது. சூர்யனிலிருந்து பதினேழு ஆயிரத்து எண்ணூற்று இருபத்து எட்டு லட்சம் மைல்கள் தூரத்தில் அதன் சுற்று வீதி இருக்கிறது. அதாவது சூர்யனிலிருந்து சனிக்கோள் பெற்

றிருப்பது எவ்வளவு தூரத்திலோ, அவ்வளவு தூரத்தில் யுரேனஸின் இடம் சனியிலிருந்து அமைந்திருக்கிறது. நாம் வசிக்கும் பூமிக்கும்—சூர்யனுக்கும் இடையேயுள்ள தூரம், யுரேனஸுக்கும்-சூர்யனுக்கும் உள்ள தூரத்தில் பத்தொன்பதில் ஒரு பங்குதான்.

**பரிமாணம் முதலியன:**—இதன் வன்ணம் கட்ற்பச்சை என்னும் படி இலங்குகின்றதாம். பரிமாணத்தில் நாம் வசிக்கும் பூமியினும் அறுபது பங்கு பெரிதாம். குறுக்களவில் பதினைந்து பங்கு அதிகங் கொண்டது; அதாவது முப்பத்து ஓராயிரத்து எண்ணூற்று எழுபத்து ஆறு மைல்கள் யுரேனஸின் குறுக்களவாகும்.

இதற்கும் பூமியைப்போல தன்னைத்தான் சுற்றிக்கொள்ளும் ஒரு கதியும் உண்டு. அப்படி ஒரு தடவை தன்னைத்தான் சுற்றிக் கொள்வதற்கு மணி 10 நிமிஷம் 47 தான் ஆகிறது. பரிமாணத்தில் பூமியினும் பெரியதாக விருந்தும் மிகச் சுருங்கிய பொழுதில் தன்னைத்தான் சுற்றிக் கொள்கிறது. ஆனால், சூரியனை ஒரு தடவை சுற்றி முடிப்பதற்கு எண்பத்து நான்கு வருடங்கள் அதற்கு வேண்டிய திருக்கிறது. சாதாரணமாக இப்பொழுதுள்ள ஒரு மனித ஆயுள் இது ஒரு தடவை சூர்யனைச் சுற்றி முடிக்கும் பொழுதைக் காண்பது அரிதாகவே இருக்கும்.

நாம் வசிக்கும் பூமிக்குக் கிடைக்கும் சூர்ய ஒளியில் முன்னூற்று அறுபதில் ஒரு பங்குதான் இந்தக் கோளுக்குக் கிடைத்து வருகிறதாம். இதனால் சூர்ய ஒளியின் உஷ்ணம் அதற்கு எட்டுவதில்லை. என்றாலும், சூர்ய குடும்பத்தைச் சார்ந்த கோளாகவே மதிக்கப்பட்டிருக்கிறது.

**பால் மதிகள்:**—இக் கோளைச் சுற்றிவரும் பால்மதிகள் அல்லது உபக்கிரகங்கள் நான்கு இருக்கின்றன. தொலை நோக்கியில் இவை சிறு புள்ளிகளாகவே புலனாவதால், இவற்றின் இயக்கங்களைப்பற்றிய விவரங்களை அறியக் கூட வில்லையாம். பிரதானமுள்ள கிரகமான யுரேனஸின் தன்மைகளையே இன்னும் பூரணமாகக் கண்டாகவில்லை. கருவிகளின் மூலம் கண்டறிவதற்கேற்ற அளவில் அவ்வளவு பெரிதாக யுரேனஸ் துலங்குவதில்லை. எல்லாக் கோள்களிலும் பெரியதான இந்தக் கிரகம் தூரத்தால் சிறு அளவில்தான் கருவிகளின் மூலம் காணக் கூடுமானதாக விருக்கிறது. ஆயினும், இதன் முக்கியம் வெகுவாக உணரப் படுவதால், மேல்நாட்டுப்புலவர்கள் இதைப்பற்றி வெகு ஊக்கமாக ஆராய்ந்த வண்ணம் இருந்து வருகின்றனர். இதன் பால் மதிகளுக்கு ஏரியல் (Ariel) அம்பிரியல் (Umbriel), டிடேனியா (Titania), ஓபெரான் (Oberan) என்று வழங்குகின்றனர்.

**தூம கேதுக்கள்:**—யுரேனஸின் ஆதிக்க பலத்தில் தூமகேதுக்கள் பலவும் சூர்ய குடும்பத்துள் அடங்கிச் சுழன்று வருகின்றனவாம். இதைச் சேர்ந்த தூமகேதுக்கள் இரண்டு பெரிய குழுவின. ஒன்று 1336-ம் வருஷத்தியது; மற்றொன்று 1867-ம் வருஷத்தியது. முன்னது 'டெம்பிள்ஸ்' (Temple's) என்றும், பின்னது 'ஸ்டீபன்ஸ்' (Stephan's) என்றும் சொல்லப்படும்.

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

விடை:—(அடிகள் முகத்தில் சிரிப்பு வந்தது.) "ஆம்; பாஞ்சாலத்தில் பால் தயிர் சாப்பிடுவோர் தொகை சிறிது அதிகமாக விருக்கலாம். ஆனால், எல்லோருமே பால், தயிருடன் சாப்பிடுவதாய்ச் சொல்வதற்கில்லை. ஐந்து ரூபாய் சம்பாதித்துச் சாப்பிட முடியாத எத்தனை இலட்சம் ஏழைகள் அங்கு இருக்கின்றனர் என்பது எனக்குத் தெரியும். அவர்கள் எல்லாம் பால் தயிர் நெய்யுடன் எப்படிச் சாப்பிட முடியும்?"

அதோடு பாஞ்சால நண்பர் உட்கார்ந்து விட்டார். பிறகு, ஐக்கிய மாகாணத்திலுள்ள மீரட் நகர காங்கரஸ் கமிட்டி செயலாளர் திரு. ராமசொரூபர் என்பவர் எழுந்து நின்றார். அவர் கேட்கத் தீர்மானித்ததைக் கேட்கக் கூடாமல் அவர் வாய் தழுதழுத்தது. அவர் கருத்தைக் குறிப்பால் அறிந்து கொண்ட அடிகள், "சொல்லுங்கள், தயக்கம் வேண்டாம்" என்றார். அந்த நண்பர், "ஐயன்மீர்! தாங்கள், பிரும்மச்சரியம் சிறந்தது என்கிறீர்கள். மற்றொரு சமயம், மனிதன் ஒருத்தியை மணம் முடித்து தூயவாழ்வு நடாத்தி அரிய மக்களைப் பெற்று நாட்டுக் களித்து, ஆதரவு செய்வதே அறமென்று மனு கூறுவதாய்ச் சொல்லுகிறீர்கள். இந்த இரு கொள்கைகளிலும் பின்பற்றக் கூடிய கொள்கை தான் யாதோ?" என்றார்.

அடிகள் விடை:—"தாங்கள் கூறுவது முற்றிலும் உண்மை. இவ்விரு கொள்கைகளையும், அவற்றிற்குரிய நெறியுடன் ஒழுக வேண்டுவதான் அறம். அறத்திற்கு ஏற்றத் தாழ்வு கற்பித்தலாகாது. ஆகவே இரு முறைகளும் சரியே. அவரவர் விருப்பத்திற்கு ஒத்த வகையில் எதையும் ஒழுகலாம்."

இவ்விடைக்குப் பின் அவர் இருந்து விட்டார். ஆனால், ஒரு மகாராஷ்டிர நண்பர் எழுந்து "குடிசைத் தொழிலைப் பற்றித் தாங்கள் விளக்கி வந்தபோது எவ்விதமாயினும் அத் தொழிலுக்கு நகரத் தொடர்பு அவசிய மென்றே ஏற்பட வில்லை. ஆயினும், தாங்கள், அத் தொழில் அபிவிர்த்திக் கென்று நிறுவியுள்ள அ. இ. கி. கை. சங்கத்தை மகன்வாடி போன்ற விடத்தில் அமைத்திருப்பது முரண்பாடான தன்றோ?" என்றார்.

அடிகள் விடை:—"ஆம், இந்த அ. இ. கி. கை. சங்கமாகிய நிறுவனத்தை இங்கு அமைத்தது உண்மையில் தவறுதான். யான் தவறு செய்து விட்டது உண்மை. ஆனாலும், இன்னொரு சந்தர்ப்பம் நேர்ந்து, இந்த நிறுவனத்தை மகன்வாடியி லிருந்து மாற்ற நேருமானால், அப்போது இது ஓர் கிராமத்திலேயேதான் அமைக்கப் படும்" என்றார். வாசகர்களே! கவனியுங்கள்; தன்னுடைய குற்றத்தை எவ்வளவு நேர்மையுடனும், கண்ணியத்துடன் ஒப்புக்கொள்கின்றார். இவ்வாறு, தமது குற்றத்தை ஒரு உலகம் புகழ்ந்து போற்றும் பெரியார் எவ்வளவு அந்தரங்க சுத்தியுடன், மறுப்பும், எதிர்ப்பும் இல்லாமல் ஏற்கின்றார்? இ. க.

போன்ற அருந்தன்மைகள் பொதிந்த பொக்கிஷமாக அடிகள் இலங்குவதனால் அன்றோ, அவர் "மகாத்மா" வென்று அகண்ட உலக மெல்லாம் போற்றப் படுகின்றார்.

மேற் கூறியபடி தமது தவறுதலுக்கு விசனம் தெரிவிக்கும் முறையிலேயே அடிகள் விடை பகர்ந்தபின் அந்த மகாராஷ்டிர நண்பர் தன் இருக்கையில் அமர்ந்தார். அப்போது ஒரு கூர்ஜர இளமங்கை, கையில் ஒரு ஒன்றரை யாண்டும் நிறம்பாத இளங் குழவியுடன் அங்கு வந்தார். இடையிலிருந்த குழந்தை அடிகளைக் கண்டதும் கைகளையும், கால்களையும் உதறிக்கொண்டு பொங்கும் களிப்புடன் "பாப்பூஜி, பாப்பூஜி...ஜீ" என்று மழலைக் கூச்சலிட்டுக் கொண்டு அடிகள் மடியில் தாவிக் கொண்டது. அடிகளும் அவ்விளங் குழந்தையை அணைத்து, தமது மடியில் அமர்த்திக் கொண்டார். அக் குழந்தை மறுபடியும், மறுபடியும், "பாப்புஜி", பாப்புஜி...ஜீ...இ...கீ" என்று கொஞ்சி அடிகள் மூக்குக் கண்ணாடியைப் பற்றி யிழுத்து தொந்தரவு செய்யத் தொடங்கி விட்டது. ஆ! என்ன களிப்பு! என்ன பேரின்பம்! முதுமை யுருவிலுள்ள அடிகள் குழந்தை உள்ளமும், அந்தச் சின்னஞ்சிறு குழந்தை யுள்ளமும் ஒன்றில் மற்றொன்று கலந்து கரைகாணாத இன்பக் கடலாடின! பின்னர் அடிகள் "நீ குறும்புக் காரன், என்னிடம் வேண்டாம்; போய்விடு" என்று குழந்தையைக் கொண்டுவந்த மங்கையிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். அத்தருணம், இதுகாறும் காத்து நின்ற திரு. குருதாஸ்மல் என்னும் நண்பர், "ஐயன்மீர்! நான் ஒரு சிந்து மாகாணத்தவன். என் மாகாணத்தில் இன்று நிகழும் கொடுமைகளைத் தங்கள் திருமுன்னர் எடுத்துரைக்க மனம் தயங்குகிறது. தங்களுக்கும் இந்த நடுங்கத்தக்க செய்தி தெரிந்திருக்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வரும்போது, "ஆம், ஆம்; ஒரு நாட்டவர்களாகிய ஹிந்து முஸ்லீம் சகோதரர்கள் தவறான கருத்துடன் தருக்கி மாள்கின்றனர். நீர் தெரிந்துள்ள அளவிற்குமேல் இச் செய்திகள், எனக்கு அதிகம் தெரியவரும்" என்று சொல்லிக் கொண்டிருக்கிற போது அடிகள் முகம் செவே ரென்று செவ்வேறி விட்டது. கண்களில் நீர் நிறைந்தது; தொண்டையில் துக்கம் தொக்கி சொற்கள் வெளிவராமல் தழுதழுத்தது. அப்போது அடிகளை நோக்கியவர்கட்கு அவர், அடிகளாய்க் காட்சி யளிக்காமல் சோகத்தின் பெருக்காய்க் காட்சி யளித்தார்.

இக்காட்சியைக் கண்ட நாங்கள், ஹிந்து முஸ்லிம்கள் பிணங்கி சச்சரவு இட்டுக் கொள்வதைக் கேட்ட அடிகள் உள்ளம் எவ்விதம் நொந்து பட்டது என்பதை எதிர்ப்படு காட்சியாய்க் காண நேர்ந்தது. ஆனால், இந்த இரு பிரிவினர்க்கும் நேரிடும் பிணக்கு களுக்கு, ஹிந்து முஸ்லீம் ஆகிய இரு சாராரும் கடுகத்தனையும் காரணர் அல்ல வென்பதும், சுயநல நோக்கோடும், நாடாளும் வேட்கையோடும் கூடிய ஓர் பேய்ச் சக்தி திரைமறைவி னின்றும் ஆட்டி அட்டூழியம் செய்து வருகிற தென்பதும் 38 கோடியே 80 இலட்சம் இந்தியரும் அறிந்திருக்கின்றனர். நிற்க,

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றப்-சு. மீ. கணபதி)

★

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"உத்தியோகத் தொல்லைகளெல்லாம் எனக்குத் தெரியாதா? நீங்கள் வந்து போகவில்லை என்பதற்காக நான் கவலைப்பட்டதில்லை. அடியுடன் வராமலிருந்தால் தானே நான் கவலை கொள்வதற்கு. நீங்கள் விரும்பியபடி நான் நடந்து கொள்ள வேண்டியவள். உங்கள் சந்தோஷம் தான் என் வாழ்வு. நீங்கள் கூறுவதுபோல் நான் நடந்து கொள்கிறேன்."

"கமலா, உடனே மாமாவை அழைத்துச் செல்ல வேண்டியதைச் செய். அவர் பணிவிடைகளைக் கவனித்துக்கொள்வதையே உன் முதல் வேலையாகக் கொள். வாசுவைத் தருவிக்க என் மனம் விரும்புகிறது. அவன் எப்பொழுது வருவான் என எதிர்பார்க்கிறது? சில மாதங்கள் லீவு போட்டுவிட்டு அவனும் இங்கு வந்திருந்தால் நலமாக இருக்கும். சரி. பார்க்லாம். மாமா, நீங்கள் சொல்கிறபடி எல்லாம் இங்கு நடைபெறும். எப்பொழுதாகிலும் நான் வர முடியவில்லையென்றால், அதற்காக வருந்தக் கூடாது" என்று சிரித்துக்கொண்டு சொல்லிவிட்டுத் தன் அறை சேர்ந்தார்.

"கமலா! உன் கணவன் மனம் எப்படியோ மாறிவிட்டதே. நீதான் அதற்குக் காரணமாயிருத்தல் வேண்டும். இதுவரை என் கடமையை நான் செய்தேன் என்ற திருப்தியுடனிருந்தேன். அதற்குப் பலனை எதிர் பார்ப்பது முடியாது என எண்ணியிருந்தேன். அது கிட்டிவிட்டது. வாசு இந்த நிலைமையில் எல்லோரையும் பார்க்கவேண்டும். அவனைப் பற்றிய கவலைதான் இனி எனக்கு. கமலா உனக்கு ஏதாவது வேலையிருந்தால் சென்று கவனி. பிறகு பார்த்துக்கொண்டால் போகிறது. நாம் இங்கிருப்பவர்தானே" என்றார்.

"இன்று முதல் அவசியமிருந்தாலன்றி வெளியில் கிளப், சினேகிதிகள் வீடு இவைகளுக்குச் செல்வதை நிறுத்தப் போகிறேன். நாள் பூராவும் வேறு வேலை கிடையாது. உங்களுடன் கூடவேயிருப்பேன். பாலனைப் பாருங்கள். ஆதிமுதல் உங்களைச் சுற்றிக்கொண்டேயிருக்கிறான். உங்களிடம் வந்தால் படுத்து தூங்கி விடுகிறான். வேறு இடத்திலென்றால் அவனைத் தூங்கப் பண்ணுவதற்குள் போதுமென்று ஆகி விடுகிறது. வாருங்கள். நாம் உள்ளே செல்லலாம். வேலைக்காரனை விட்டு அந்த அறையில் படுக்கை விரிக்கச் சொல்கிறேன்" எனவும் ஆனந்தத்துடன் கிழவர் அவளைப் பின் பற்றிச் சென்றார்.

---

## ஐந்தாவது அதிகாரம்

### மன மாறுதல்

"அதிர்ஷ்டம் என்று எதைச் சொல்லுகிறோம்? திடீரென்று எதிர் பாராத விதமாக நமக்கு வேண்டியது நடந்துவிடின் அதைத் தான் அதிர்ஷ்டம் என்னும் பெயரால் அழைக்கிறோம். கொடுத்துவைத்தது கிடைத்தது என்பார்கள். இந்த அதிர்ஷ்டம் என்பது யாவருக்குமே சித்திக்

கிறதா எனில் ஆம் என்றுதான் பதில்கூற வேண்டியிருக்கும். ஒரு பிச்சைக்காரனிருக்கிறான், அவனுக்கு இரண்டு வேளைக்கு ஒன்றுமே அகப்படாமல் பட்டினி கிடக்கிறான். அவன் வயிறார அடுத்த வேளைக்கு அவனுக்கு அன்னம் கிடைத்தால் அவன் அதனை தனது அதிர்ஷ்டமெனவே கொள்வான். வாழ்வில் அதிர்ஷ்டஹீனன் எவருமில்லை யெனக் கூறுதல்வேண்டும். தனக்கும் அது போன்று அதிர்ஷ்டம் ஏற்படக் கூடாதா? நான் எதில் குறைந்திருக்கிறேன்? வாசு ஏன் என்னை மணக்க மறுக்கவேண்டும் எனத் தெரியவில்லையோ? அதிர்ஷ்டம் என் பங்கிலிருந்தால் காலையில் சம்மத மளிப்பார். ஆண்டவன் அதற்குத் துணை புரியவேண்டும். மனிதராகிய நம்மால் எதுவும் நடைபெறாது. அம்மா எப்படி வற்புறுத்தியும் இணங்காதவர், காலையில் சம்மதிப்பார் என எதிர்பார்த்தல் சாத்தியமானால், அது கடவுளின் அருள் என்றும், எனது அதிர்ஷ்டம் என்றுமே கொள்ளவேண்டும். அவர் சென்ற பின்பு அம்மா ஏன் பேசாது படுத்திருக்கிறாள். அவள் மனம் உடைந்து விட்டதா?" இப்படியே எண்ணிக்கொண் டிருந்தாள் சுவர்ணம் வாசு சென்ற பின்பு. அவளின் கடைசி ஆசை பூர்த்தி யாயிற்று. பத்மாசனி பேச ஆரம்பித்தாள்.

"சுவர்ணா! நாம் என்னவோ எண்ணி வந்தோம். காரியம் கை கூடவில்லை. இனி அவன் மனம் மாறுவது கடினம். நாம் நாளை ஊர் செல்ல வேண்டியதுதான். உனக்கு எங்கு முடிபோட்டிருக்கிறதோ கடவுளுக்குத் தான் வெளிச்சம். நான் இதுபோன்று ஆகுமென எண்ணவில்லை. அந்தப் பெண் சந்திரா இருக்கிறாளே! அவளை விரும்பி, வாக்குக் கொடுத்திருப்பானோ என்னவோ? நீ அதிகநேரம் அவள் கூடப் பேசிக்கொண் டிருந்தாயே! ஏதாவது சமிக்ஞை தெரிய வந்ததா?"

"எனக்கு ஒன்றுமே தெரியவில்லை. ரொம்ப காலமாக இவரும் அவள் அண்ணனும் சிநேகிதமாம். இவள் சிறு குழந்தையா யிருந்த பொழுதிருந்து பழக்க மாதலால் வித்யாசமின்றி இருப்பதாகச் சொன்னாள். வேறு விஷயம் ஒன்றும் புலப்படவில்லை."

"பெரிய அசடுபாதிரி ஆகிவிட்டாய். அவளுக்குக் கல்யாணம் எப்பொழுது செய்யப் போகிறார்கள். வரன் ஏதாவது பார்த்திருக்கிறார்களா என்ற விவரம் தெரிந்து கொண்டிருக்கவேண்டும். நாளைக்கு அங்கு சென்றால் ஞாபகமாக இதை விசாரித்துத் தெரிந்துகொள்."

"நான் விசாரிக்கவில்லை என எண்ணிக்கொண் டிருக்கிறாயா? அவள் நமக்குமேல் பெரிய கள்ளியா யிருக்கிறாள். நான் கேட்டதற்கு, அவள் இப்பொழுது மணந்துகொள்ள உத்தேசமில்லை யென்றும், படிக்கப் போவதாகவும் சொன்னாள். எனக்கு நம்பிக்கையில்லை. வேறு வழியாய் எப்படித் தெரிந்து கொள்வது எனத் தெரியாமல் பேசாமலிருந்து விட்டேன்."

"அவ்வளவு சமர்த்துக்காரியா அவள்? அதுதான் வாசுவை மயக்கியிருக்கிறாள். அது நன்றாகத் தெரிகிறது. இந்தமாதிரி இவள் ஒருத்தியிருப்பது முன்பே தெரியாமல் போய்விட்டதே. ஆனது ஆகிவிட்டது. இனிக் கவலைப்படுவதில் பிரயோசன மிருக்கப் போவதில்லை. உன் கல்யாண விஷயமான சிரத்தை கொஞ்சம் உனக்கும் இருக்கட்டும்."

"ஆமம்மா! அவருடைய அப்பாவிடம் சென்று நம் கருத்தைக் கூறுவது. அவர் சரி யென்றால் இவர் ஒப்புக்கொள்ளாமல் என்ன செய்வது? எனக்கு இந்த வழி நல்லதென்றே தோன்றுகிறது. தவிர, நான் எப்படி சிரத்தை எடுத்துக் கொள்ளவேண்டு மென்கிறாய்."

"உலகமே அறிந்து கொள்ளாமல் பேசுகிறாய். அவன் அப்பாவிடம் கூறினால் காரியம் நடந்து விடும் என நினைக்காதே. அவருக்கு துணி

சிரத்தை யிருந்தாலும் வாசுவுக்கு கல்யாணம் எப்பொழுதோ நடந்திருக்க லாம். அந்த மனுஷன் உலக சிந்தனையற்று, தன் மகளின் அந்தஸ்தில் ஆழ்ந்து போயிருக்கிறார். அதுவும் நாகரீகம் என நினைத்து பிள்ளை இஷ்டப்பட்டால் செய்து கொள்ளட்டும் என்றிருப்பார்கள். நேரமாகி விட்டது. நாளை இரவு வண்டியில் போகவேண்டி யிருக்கும். தூங்குவதற்கு முயற்சி செய்'' என்றாள் பத்மாசனி.

வாசு இஷ்டத்தைத் தெரிவித்தார். மூன்றுவது நாள் முகூர்த்தம் நடந்து விட்டது. தனிமையில் வாசுவை கண்டதும் சுவர்ணம் முதலில் மறுத்துப் பின் ஒப்புக் கொண்டதற்குக் காரணம் என்ன என்பதைக் கூறுங்கள் என்றாள். வாசு மௌனம் சாதித்தான். பதில் சொல்லாத வரை உங்களுடன் நான் பேசப் போவதில்லை என்றாள். அதற்கும் பதிலில்லை. சரியான தண்டனை கொடுக்க வேண்டியதுதான் என்று கூறி அருகில் நெருங்கினாள். வாசு இருந்த இடத்தை விட்டு எழுந்து சென்றான். திடீரென விழிப்பு ஏற்பட்டது. தான் கண்டது கனவு என்பதை சுவர்ணம் அறிந்து வெட்கினாள். இந்தக் கனவு நனவாகக் கூடாதா? கனவில் அனுபவித்த ஆனந்தம் கிடைக்கவேண்டுமே, ஈஸ்வரா என்று மனதில் கொண்டாள். இந்தக் கனவில், நாம் போகாத இடம், அனுபவிக்காத இன்பம், கிட்டாத பொருள் எல்லாம் சித்திக்கிறது. கனவின் அற்புதந்தான் மிகவும் வியப்பை அளிக்கக் கூடியதா யிருக்கிறது. கனவில் காண்பது அப்படியே நடந்து விடின் எவ்வளவு ஆனந்த மடைவோம்?

காலையில் வாசு தன் அறை சேர்ந்தான். காலை ஆகாரத்திற்கும், பகல் சாப்பாட்டிற்கும் வேண்டியவற்றை வாங்கி வந்தான். பகல் சாப்பாட்டிற்குப் பிறகு மீண்டும் சம்பாஷணை தொடர்ந்தது.

''வாசு உன் தீர்மானம் என்ன? நீ உலகம் தெரியாதவனல்ல. சுவர்ணம் உனக்கு ஏற்றவள். வீணில் மறுக்காதே. பின்பு உனக்கு இவள் போன்றவள் அகப்படமாட்டாள். நன்றாக யோசித்திருந்தால் உன் அபிப்ராயத்தைச் சொல்.''

''நான் நேற்றுக் கூறியதைத் தான் மறுபடியும் சொல்லவேண்டும். என் தீர்மானம் முடிவானதுதான்.''

''சரி; நீ எங்காவது நன்றா யிருக்கிறாய் எனக் கேட்டால் போதும். சுவர்ணுவுக்கு எவனாவது பிறந்திருப்பான். அது போகட்டும். உனக்கு வேறு எந்தப் பெண் மீதாவது நோக்கமுண்டா? அதையாவது சொல்லேன்.''

''இது போன்ற கேள்விகள் கேட்பது நல்லதல்ல. அவ்விதமிருந்தால் உங்களிடம் சொல்வதில் எனக்கு பயமில்லை. நான் மணம் [illegible]ளும் நினைப்பே கிடையாது. உங்கள் மாதிரி பரிவுடன் [illegible] கிடையாது. ஆயினும் நான் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. [illegible] பற்றி உங்கள் யோசனை தெரிவித்தால் நான் பார்த்து [illegible]கிறேன். மாலையிலேயே அங்கு குடித்தனம் நடத்த ஏற்பாடு செய்ய[illegible]

''நான் நேற்றே சொன்னேனே. நீ மறுத்து விட்டால் நாங்கள் இங்கிருக்க முடியாது. எனக்கு ரயில் எப்பொழுது? அதைப் பார்த்து என்னை ரயிலேற்றி விட்டால் போதும்.''

''கண்டிப்பாக நீங்கள் புறப்படத்தான் வேண்டுமானால் [illegible]படியே செய்யலாம். எனக்கும், என் தகப்பனுக்கும் [illegible] உதவி யிருக்குமென எண்ணினேன். நான் வெளியே போய் இதோ வருகிறேன்'' என்று கூறி வெளியே சென்றுதான் குறித்தபடி வந்து சேர்ந்தான்

''என் கூட கடைவீதி வரையில் வருகிறீர்களா? சுவர்ணுவுக்கு ஒரு புடவை எடுத்துக் கொடுக்கலாமென நினைக்கிறேன்.''

# சுபானு ஞூ மார்கழிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியாரமணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| | | | | | | | | (வ) | | | | (வ) | | | | (வ) | | | |
| 1 | 5 | 34 | 46 | 239 | 55 | 108 | 38 | 46 | 11 | 258 | 36 | 124 | 08 | 195 | 47 | 60 | 12 | 105 | 57 |
| 2 | 5 | 38 | 42 | 240 | 56 | 120 | 30 | 45 | 52 | 259 | 59 | 124 | 07 | 196 | 56 | 60 | 07 | 105 | 53 |
| 3 | 5 | 42 | 39 | 241 | 59 | 132 | 18 | 45 | 33 | 261 | 18 | 124 | 06 | 198 | 05 | 60 | 02 | 105 | 50 |
| 4 | 5 | 46 | 35 | 243 | 02 | 144 | 07 | 45 | 15 | 262 | 37 | 124 | 05 | 199 | 14 | 59 | 57 | 105 | 47 |
| 5 | 5 | 50 | 32 | 244 | 05 | 156 | 12 | 44 | 58 | 263 | 51 | 124 | 04 | 200 | 23 | 59 | 52 | 105 | 44 |
| 6 | 5 | 54 | 29 | 245 | 08 | 168 | 18 | 44 | 41 | 265 | 05 | 124 | 03 | 201 | 33 | 59 | 48 | 105 | 41 |
| 7 | 5 | 58 | 25 | 246 | 11 | 180 | 59 | 44 | 25 | 266 | 12 | 124 | 01 | 202 | 43 | 59 | 43 | 105 | 38 |
| 8 | 6 | 02 | 22 | 247 | 14 | 193 | 41 | 44 | 10 | 267 | 19 | 123 | 59 | 203 | 53 | 59 | 38 | 105 | 35 |
| 9 | 6 | 06 | 18 | 248 | 17 | 207 | 10 | 43 | 56 | 268 | 16 | 123 | 57 | 205 | 03 | 59 | 33 | 105 | 31 |
| 10 | 6 | 10 | 15 | 249 | 20 | 220 | 40 | 43 | 42 | 269 | 13 | 123 | 54 | 206 | 13 | 59 | 28 | 105 | 28 |
| 11 | 6 | 14 | 12 | 250 | 23 | 234 | 57 | 43 | 29 | 269 | 58 | 123 | 52 | 207 | 23 | 59 | 23 | 105 | 24 |
| 12 | 6 | 18 | 09 | 251 | 26 | 249 | 15 | 43 | 17 | 270 | 42 | 123 | 49 | 208 | 34 | 59 | 19 | 105 | 21 |
| 13 | 6 | 22 | 05 | 252 | 29 | 263 | 58 | 43 | 06 | 271 | 10 | 123 | 47 | 209 | 44 | 59 | 14 | 105 | 18 |
| 14 | 6 | 26 | 02 | 253 | 32 | 278 | 42 | 42 | 56 | 271 | 38 | 123 | 44 | 210 | 55 | 59 | 09 | 105 | 15 |
| 15 | 6 | 29 | 58 | 254 | 35 | 293 | 24 | 42 | 47 | 271 | 46 | 123 | 41 | 212 | 05 | 59 | 04 | 105 | 11 |
| 16 | 6 | 33 | 55 | 255 | 39 | 308 | 07 | 42 | 38 | 271 | 54 | 123 | 38 | 213 | 16 | 59 | 00 | 105 | 08 |
| | | | | | | | | | | (வ) | | | | | | | | | |
| 17 | 6 | 37 | 51 | 256 | 42 | 322 | 10 | 42 | 31 | 271 | 40 | 123 | 35 | 214 | 27 | 58 | 55 | 105 | 05 |
| 18 | 6 | 41 | 48 | 257 | 45 | 336 | 14 | 42 | 24 | 271 | 26 | 123 | 32 | 215 | 38 | 58 | 51 | 105 | 02 |
| 19 | 6 | 45 | 44 | 258 | 48 | 350 | 15 | 42 | 18 | 270 | 48 | 123 | 28 | 216 | 49 | 58 | 46 | 104 | 59 |
| 20 | 6 | 49 | 41 | 259 | 51 | 4 | 17 | 42 | 12 | 270 | 10 | 123 | 24 | 218 | 01 | 58 | 42 | 104 | 56 |
| 21 | 6 | 53 | 37 | 260 | 54 | 17 | 31 | 42 | 07 | 269 | 11 | 123 | 20 | 219 | 12 | 58 | 37 | 104 | 53 |
| 22 | 6 | 57 | 34 | 261 | 57 | 30 | 45 | 42 | 03 | 268 | 11 | 123 | 16 | 220 | 24 | 58 | 33 | 104 | 50 |
| 23 | 7 | 01 | 31 | 263 | 00 | 43 | 30 | 42 | 00 | 266 | 57 | 123 | 12 | 221 | 35 | 58 | 28 | 104 | 47 |
| 24 | 7 | 05 | 28 | 264 | 03 | 56 | 16 | 41 | 58 | 265 | 43 | 123 | 07 | 222 | 47 | 58 | 24 | 104 | 44 |
| 25 | 7 | 09 | 24 | 265 | 06 | 68 | 37 | 41 | 56 | 264 | 24 | 123 | 02 | 223 | 58 | 58 | 20 | 104 | 40 |
| 26 | 7 | 13 | 21 | 266 | 09 | 80 | 59 | 41 | 56 | 263 | 04 | 122 | 57 | 225 | 10 | 58 | 16 | 104 | 37 |
| | | | | | | | | வதி | | | | | | | | | | | |
| 27 | 7 | 17 | 17 | 267 | 12 | 93 | 01 | 41 | 56 | 261 | 49 | 122 | 52 | 226 | 22 | 58 | 12 | 104 | 34 |
| 28 | 7 | 21 | 14 | 268 | 15 | 105 | 03 | 41 | 57 | 260 | 33 | 122 | 47 | 227 | 34 | 58 | 08 | 104 | 31 |
| 29 | 7 | 25 | 11 | 269 | 18 | 116 | 53 | 41 | 57 | 259 | 29 | 122 | 42 | 228 | 46 | 58 | 04 | 104 | 28 |

**ஆகாயக் காட்சி:**—இம்மாதம் காட்சிக்குரிய பொழுதில் எதுவும் நேருவதில்லை.

**பிரவேஸங்கள்:**—1வ காலை மணி 8-58க்கு **சூரியன்** விருச்சிக மிருந்து தனுவிற்கும், 13வ பகல் மணி 12-09க்கு **சுக்ரன்** துலா மிருந்து விருச்சிகத்திற்கும், 3வ மாலை மணி 4-36க்கு **சனி** மிதுன மிருந்து விருஷபதிற்கு வக்ரீயாகவும் பிரவேஸ மாகின்றன.

16வ புதன் **வக்ராரம்பம்.** 18வ புதன் பஸ்சாத் (மேற்கில்) வக்ராஸ்தமனம். 26வ அங்காரகன் வக்ரத்தியாகம்.

---

* **அயனம்சம் பா-22 கலை-56 விகலை 32·5096 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.**

† **ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.**

# “ ஆனந்தபோதினி ” பஞ்சாங்கம்.

சுபானுஸு மார்கழிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1362-63
இங்கிலீஷ் 1943ஸு டிசம்பர்மீ—ஜனவரிமீ 1944ஸு

| மார்கழி | டிசம்பர்மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வியா | பஞ்57-07 | ஆ51-33 | சி51-33அ | ஷடசீதி புண்ய காலம், தனுர் பூஜா ஆரம்பம் |
| 2 | 17 | வெள் | சஷ்60-00 | மக58-15 | ம58-15சி | திருதின ஸ்மிருக் |
| 3 | 18 | சனி | சஷ்2-23 | பூர60-00 | சித்60 | திஸ்ரோஷ்டகா |
| 4 | 19 | ஞா | சப்7-10 | பூர4-13 | சி4-13அ | அஷ்டக சிரார்த்தம் |
| 5 | 20 | திங் | அ11-25 | உத்9-33 | சித்60 | அன்வஷ்டகா |
| 6 | 21 | செவ் | நவ14-48 | அ14-51 | ம14-51சி | கரிநாள்-சுபம் விலக்க |
| 7 | 22 | புத | தச16-47 | சித்17-23 | சித்60 | தெய்வகதமான சுபகரங்கள் |
| 8 | 23 | வியா | ஏ18-03 | சு19-47 | அ19-47சி | சாபல்ய-சர்வ ஏகாதசி |
| 9 | 24 | வெள் | து17-20 | வி21-09 | சித்60 | பிரதோஷம் |
| 10 | 25 | சனி | திர16-13 | அ21-04 | சித்60 | மாஸ சிவராத்திரி |
| 11 | 26 | ஞா | சசி13-17 | கே19-13 | ம19-13அ | **அமாவாஸ்யை விரதம்** [ல |
| 12 | 27 | திங் | ●9-35 | மூல16-47 | சி16-47ம | வழக்குத் தொடர தூது செல் |
| 13 | 28 | செவ் | பிர4-47 துதி59-24 | பூர13-50 | சி13-50பி | |
| 14 | 29 | புத | திரு54-09 | உத்10-13 | அ13-50சி | |
| 15 | 30 | வியா | சது47-58 | திரு6-37 | சித்60 | |
| 16 | 31 | வெள் | பஞ்42-05 | அ2-23 சத58-10 | சித்60 | |
| 17 | 1 | சனி | சஷ்36-37 | பூ54-35 | ம54-35சி | |
| 18 | 2 | ஞா | சப்31-10 | உட்51-07 | அமி60 | |
| 19 | 3 | திங் | அ26-33 | ரே48-10 | சித்60 | |
| 20 | 4 | செவ் | நவ22-12 | அசு46-15 | சித்60 | |
| 21 | 5 | புத | தச19-17 | பர44-54 | சி44-54அ | |
| 22 | 6 | வியா | ஏ17-23 | கி✽44-50 | மர60 | **கிருத்திகை விரதம்**, வைகுண்ட ஏகாதசி [துவாதசி |
| 23 | 7 | வெள் | துவ16-47 | ரோ46-47 | ம46-47சி | பிரதோஷம், கூர்ம-அகண்ட |
| 24 | 8 | சனி | திர16-40 | மிரு49-13 | சித்60 | இரவில் ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் |
| 25 | 9 | ஞா | சசி18-35 | திரு52-50 | சித்60 | பௌர்ணமி பூஜை, ஆருத்திரா தரிசனம் [வி-43 |
| 26 | 10 | திங் | ப○21-37 | புன57-07 | அ57-07சி | கர்போட்ட நிவர்த்தி |
| 27 | 11 | செவ் | பிர25-48 | பூச60-00 | சித்60 | புஷ்ய பகுளம் |
| 28 | 12 | புத | துதி30-33 | பூச3-00 | சித்60 | மந்திரார்த்தங்கள் |
| 29 | 13 | வியா | திரு35-25 | ஆ9-36 | சி9-36அ | போகி-பண்டிகை |

(1944ஸு ஜனவரிமீ)

| | | | |
|---|---|---|---|
| | | செவ் | சனி |
| | 3-ரிஷ-சனி<br>11-மக-புத<br>13-வி-சுக்<br>16-வக்-புத<br>20-த-வ-புத<br>26-வ-தி-செ | | ராகு |
| கே | | | குரு |
| சூரி புத | | சுக் | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE “ ANANDA BODHINI ” PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்!** **அழுதவன் சிரிப்பான்!!**

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பில் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நாள்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும்.

விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபால் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

**ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபால்கூலி இனாம், வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.**

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி. மேக தாமரை, மேக கமைச்சல், மேக இரணம்; மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லா வகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொருமுறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண நிலவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை திரேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# காப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி, இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை எரிச்சல், தொண்டைக் கரகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1.

# ஜி. கியூர்

## இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் கள்ளநோய், நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை நீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக் கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

# மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தில் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழ... இருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் ...

3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூபா 1.

# மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய யிடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து ...வினால் மயிர் போய்விடும்.

புட்டி 1-க்கு விலை அணா 8.

**தனலட்சுமிகம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2 பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனாமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீருகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

இந்திர கவசமென்னும் சர்வ தேவதா வசியம்
முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது. **விலை ரூபா 1.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**